






சர்ப்ரைஸுக்கு
நாங்க தயார்!

# நீங்க?...








# இரவு, இருட்டு,




## வட்டமேஜை

✉ தேசியமும் தெய்விகமும் என் இரு கண்கள் என்ற வானதி திருநாவுக்கரசின் கருத்து போற்றற்குரியது.

வாஷி, எம்.ஜே.ராமன்

✉ ஹீரோக்களின் காலடியில் வாலாட்டிப் படுத்திருக்கும் தமிழ்சினிமாவை விடுவிக்கும் அமீரின் உத்வேகத்துக்கு இன்றைய இளம் கலைஞர்கள் உதவிக் கரம் நீட்ட வேண்டும்.

வேலாயுதம்பாளையம், எம்.சம்பத்

✉ 'கொடுக்கட்டுமா முத்தம், குடிக்கட்டுமா ரத்தம்'. கற்பனை கலந்துரையாடல் ஏற்படுத்திய திகில் மந்தரித்த பிறகுதான் மறைந்தது!

நெய்வேலி, எஸ்.கண்ணன்

✉ 'எங்கிட்ட மோதாதே' படித்தேன். ரஜினியின் படத்தை வாங்குகிற விநியோகஸ்தர்கள் அதில் கிடைக்கிற லாபத்தை வைத்து பத்து சின்னப் படங்களை வாங்கித் திரையிட முடியும் என்கிற திரையுலக நற்செய்தியைப் படிக்கும் போது அவசியம் வருடத்துக்கு ஒரு படமாவது நடிக்க வேண்டும் என்ற எண்ணம் ரஜினிக்கு வர வேண்டும்.

இலால்குடி, ராஜேந்திரன்

✉ 'பேய் இருக்கிறது' இந்திரா சௌந்தரராஜனின் பேட்டி, திகில் கதை படித்த 'திடுக்'கை ஏற்படுத்தியது.

திருவாரூர், ஆர்.ராமசுப்ரமணி

### வாரம் ஒரு வாசகர்!



ஆல்பர்ட் - ஹிட்சாக் - ஆங்கிலப் படங்களுக்கு இணையாக, ஆறு ரூபாய்க்கு, 'திகில்' ஸ்பெஷல் - ரியலி ஒண்டர்புல்!

- ரேவதிப்ரியன், ஈரோடு

✉ வாசகர்கள் விரும்பிப் படிக்கும் புத்தகங்கள் எல்லாமே இலக்கியம்தான் என்கிற எழுத்தாளர்கள் சுபாவின் கருத்து ஏற்புடையதல்ல. திருக்குறளும் திகில் நாவலும் ஒன்றே என்பது இலக்கியத்திற்கே இழுக்கு!

சென்னை, கே.என்.பாலகிருஷ்ணன்

✉ 'பாகிஸ்தானுக்கு ஆடை, இந்தியாவுக்கு பருத்தி' வெறும் மூன்று பக்கத் தலையங்கம் மட்டுமல்ல. 'இந்திய - பாக்.' நல்லுறவு மேம்பட கல்கி வழங்கியிருந்த முத்தான யோசனையும்கூட!

திருவாரூர், ஆர்.ராமசுப்ரமணி

✉ இலவச பாட புத்தகங்கள் பற்றிய கேள்விக்கு தங்களின் பதில் வருத்தத்தை அளித்தது. குழந்தைகள் தாங்களே சம்பாதித்து தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்துக் கொள்ளக் கூடிய நிலை மாறத்தான் இத் திட்டங்களே. உணவு முதல் காலணி வரை இலவசமாகத் தருவது, பிள்ளைகளை எப்படியும் பள்ளிக்குச் சென்று படிக்கச் செய்வதற்காகவே. சிந்திக்கக் கூடிய ஒரு சமுதாயம் உருவாகத் தூவப்படும் விதைகளே இவை எனக் கொள்வதே சரியான கண்ணோட்டம். மற்றபடி நீங்கள் குறிப்பிடும் பிச்சைக்கார மனோபாவத்தை வளர்ப்பது அரசியல் ஆதாயங்களுக்காகக் கொடுக்கப்படும் இலவச வேட்டி - சேலை, கஞ்சி, பிரியாணி ஆகியவைதான்.

சென்னை, எஸ்.உமா

✉ இரவு, இருட்டு, ஆவி என தேடி நடு ராத்திரியில் கிளம்பிய கூழுக்கு மிஞ்சியது டீக்கடை தேநீர் ஆவிதான் என படித்த

# ஆவி... டீ!

போது சிரிப்பாக இருந்தது.
ஈரோடு, மதி அசோக்

✉ அல்போன்ஸ் ராயின் திகில் பயண அனுபவங்கள் படு சுவை.
சென்னை, அனந்தராமன்

✉ ஆசிரியர் பக்கத்தில் வந்த 'சமத்துவப் போர்வையில் சுரண்டல்!' அட்சரலட்சம் பெறும்!
சென்னை, எஸ்.ஆர்.ஹரிஹரன்

✉ தனக்கே உரித்தான பாணியில் மூங்கில் காட்டு பங்களாவில் நடந்த திகில் சம்பவத்தைச் சொல்லி மனத்தை படபடக்க வைத்துவிட்டார் மர்மராசா ராஜேஷ்குமார்.
புனலூர், பி.தனசேகர்

## அலங்கரிக்கச் சென்றதா?



✉ அமரர் கல்கி, சாண்டில்யனோடு சரித்திர கதை முடிந்து விட்டதென கவலை கொண்டிருந்தேன். அக்கவலையைத் தீர்த்துவிட்டார் விஸ்வக்ஸேனன்.
காயக்காடு, 'ஆவி' ராமகிருஷ்ணன்

✉ விஷ்வக்ஸேனின் மகுட வைரம் 37 வாரங்களாக ஜ்வலித்து பிறகு சோழர் மணி மகுடத்தை அலங்கரிக்கச் சென்றுவிட்டதா?
சென்னை, ஜே.துரைராஜ்

✉ சமீப காலத்தில் இப்படியொரு சரித்திரத் தொடர் நாவல் எழுதப்படவில்லை என்கிற அளவுக்கு வெகு அற்புதமாக இருந்தது.
பெங்களூர், ப.மூர்த்தி

✉ சரித்திரம் என்றாலே எட்டிக்காயாக கசக்கும் எனக்கு 'மகுட வைரம்' சரித்திரத் தொடர் தேனாக இனித்தது.
திருநெல்வேலி, பாரத்வாஜன்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ்
பிரைவேட் லிமிடெட்டிற்காக
பரதன் அச்சகத்தில்
அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேஜைக்கு

கிழக்குக் கடற்கரை சாலையில் உள்ள கொட்டிவாக்கத்துக்குக் குடிபோய் விட்டார் விஜய். அங்கொன்றும், இங்கொன்றுமாய் சந்தடியற்றுக் கிடந்த பங்களாக்களில், விஜய்யின் வீட்டைக் கண்டுபிடித்து உள்ளே நுழைந்தபோது முக்கால் பேண்ட்டும், முழுக்கை சட்டையுமாக மகன் சஞ்ஜய்யுடன் முன்புறத் தோட்டத்தில் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தார். அவரது பதில்கள் அத்தனையும் சீரியஸாக இருந்தன.

**'எனது பாதை ஆக்ஷன் நூறு சதவிகிதம் பொழுதுபோக்கு' என்று போய்க் கொண்டிருந்த விஜய், சச்சினில் எப்படி திடீர் ரோமியோ ஆனார்?**

என்னோட பாதையிலேர்ந்து நான் மாறவே இல்லையே. திருமலை, மதுர, கில்லி, திருப்பாச்சி படங்கள்ல காதல் இருந்தாலும் ஆக்ஷன்தான் தூக்கலாக இருந்தது. சச்சின்ல காதல்தான் தூக்கல். ஆனால் வழக்கமான என்டெர்டயினர் விஜய் இதுலேயும் இருக்கானே! இதுக்கு முன்னாடி குஷி, துள்ளாத மனமும்

# யாரோடு யார் போட்டி போடுறது?



துள்ளும் படங்கள் இதே ஸ்டைல்தான். முக்கியமா காதலுக்கு மரியாதை மாதிரி ஒரு சாஃப்டான லவ் சப்ஜெக்ட்ல எப்போ நடிப்பீங்கன்னு ரசிகர்கள் கேட்டுக்கிட்டே இருந்தாங்க. அதுவும்கூட ஒரு காரணம்.

**ஆக்ஷன், ஆட்டம், பாட்டு - இதில் அப்படியென்ன காதல் உங்களுக்கு?**

எனக்கு சின்ன வயசுலேர்ந்து பொழுதுபோக்குப் படங்கள்தான் அதிகமாகப் பிடிக்கும். படத்தோட கதையைவிட, படத்துல வர்ற ஹீரோ என்ன பண்றார்? எப்படி ஸ்டைல் பண்றார்? எப்படி டான்ஸ் ஆடுறார்? இதைத்தான் பார்ப்பேன். ஒரே படத்துல ஹீரோ காமெடி பண்ணணும், காதல் பண்ணணும், கண்ணீர் விட்டு அழணும்னு விரும்புவேன். அமிதாப் பச்சன் இந்த காம்பினேஷன்ல அசத்தலா நடிப்பாரு. அவரை ரொம்பப் பிடிக்கும். அதுக்காக நல்ல படங்கள் எனக்கு அறவே பிடிக்காதுன்னு அர்த்தமில்லை. மூன்றாம்பிறையைப் பலமுறை பார்த்துருக்கேன். நாயகன், அபூர்வ சகோதரர்கள் பார்த்து பிரமிச்சிருக்கேன். சமீபத்துல ரொம்பப் பிடிச்ச படம்னா பிதாமகன். மசாலா படங்கள் அதிகமா பிடிக்கிறதுனால என்னோட ரூட்டும் அதுவா மாறிப் போச்சு!

**மதுர, திருப்பாச்சி இப்போது சிவகாசி என்று ஊர்ப் பெயர்களை படத்துக்குத் தலைப்பாக வைக்கிறீர்கள். உங்களது ரசிகர் மன்றங்களை ஊர்வாரியாக வலுப்படுத்தும் டெக்னிக்தானே இது?**

ஒவ்வொரு படத்துக்கும் ஒரு நூறு தலைப்பாவது லிஸ்ட் எழுதுவோம். ஒவ்வொரு படத்துக்குமே, மதுர வரும், திருப்பாச்சி வரும், சிவகாசி வரும். இந்த முறை சிவகாசி வந்துடுச்சி. இது திட்டமிட்டுப் பண்ணலை. ஸ்டண்ட் மாஸ்டர் சூப்பர் சுப்பராயன் மாஸ்டர்கிட்டே மதுரன்னு ஒரு அசிஸ்டெண்ட் வேலை செஞ்சாரு. "டேய் மதுர, இங்கே வாடா"ன்னு கூப்பிடுவார். அது கேக்குறதுக்கு ரொம்ப நல்லா இருந்தது. அந்த இன்ஸ்பிரேஷன்லதான் 'மதுர' வெச்சோம். சிவகாசி படத்துலே ஹீரோவோட பேரு சிவகாசி. இன்னொரு பக்கம் பார்த்தா, சிவகாசியிலேருந்து நிறைய ரசிகர்கள் போன் பண்ணி, 'எங்க ஊர் பேரை படத்துக்குத் தலைப்பா வெச்சிருக்கீங்க. ரொம்ப சந்தோஷமா இருக்கு'ன்னு சொன்னாங்க. அப்புறம்தான் புரிஞ்சுது, ஊர் பேரை தலைப்பா வைக்கும்போது, அங்க வாழ்ற மக்கள்கூட நமக்கு நெருக்கம் கிடைக்குதுன்னு. இது ஒரு ப்ளஸ்தான்.



## மாறுபட்ட கதாபாத்திரங்கள் எனக்கு ரிஸ்க்கான மேட்டர்தான்!

**சிவகாசி என்றதும் பட்டாசைத் தவிர வேறு என்ன ஞாபகம் வருகிறது?**

வைகோ.

**பட்டாசுத் தொழிற்சாலையில் வேலை செய்து கருகும் சிறார்களைப் பற்றி எதவும் கேள்விப்படவில்லையா?**

என்ன இப்படிக் கேக்குறீங்க? பட்டாசு சுத்துற சிறுவர், சிறுமிகள் அத்தனை பேரும் என்னோட ரசிகர்கள்னு, அவங்க எழுதற லெட்டர்லேர்ந்து தெரியுது. அவங்க ஸ்கூலுக்குப் போய் படிக்க முடியா



அம்மா, அப்பா பேச்சை கேக்கிறவன்கிறதுக்காக இல்ல! எனக்கே இப்போல்லாம் ரொம்ப உறுத்துது. அதனால ரெண்டு மூணு படத்துக்கு முன்னாடியே குடிக்கிற மாதிரி நடிக்கிறதை நிறுத்திட்டேன். திருப்பாச்சி, சச்சின்ல எல்லாம் இது கிடையாது.

**ரஜினி - கமல் படங்களோடு உங்கள் படத்தை போட்டியாக வெளியிட்டிருக்கிறீர்களே?**

போட்டிங்கிற வார்த்தையை தயவு செஞ்சு பயன்படுத்தாதீங்க! அவங்க

## ‘சுக்ரன்’ படத்தைப் பார்த்துட்டு, அதிர்ச்சி ஆயிட்டேன்!

மல், குடும்பக் கஷ்டத்துக்காக வேலைக்கு வர்றாங்க. அவங்க உழைப்புல லாபம் சம்பாதிக்கிற பட்டாசுக் கம்பெனிங்க, அவங்க படிப்புக்கும் உதவி பண்ணினா நல்லா இருக்கும்.

**கடந்த ஆண்டு மட்டும் தமிழகத்தில் ஐயாயிரம் கோடி ரூபாய்க்கு அரசு மது விற்பனை செய்திருக்கிறது. இதில் நாற்பது சதவிகித விற்பனைக்குக் காரணம், பதினைந்து முதல் முப்பத்தைந்து வயதுக்குட்பட்ட இளைஞர்கள் என்கிறது ஆய்வில் ஈடுபட்ட அரசு சாரா தொண்டு நிறுவனம். இன்னொரு அதிர்ச்சிகரமான உண்மை, சினிமாவில் தங்கள் அபிமான ஹீரோவைப் பார்த்தே, மது அருந்தவும், புகை பிடிக்கவும் கற்றுக்கொள்வதாக சொல்லியிருக்கிறதே?**

இதுக்கு முன்னாடி எனக்கு இதோட சீரியஸ்னெஸ் தெரியாமப் போச்சி. நிறைய என்.ஜி.ஓஎஸ். சொன்னாங்க. எங்க அம்மாவே ‘அப்படியெல்லாம் நடிக்கிறதை கொறைச்சுக்கப்பா’ன்னு சொன்னாங்க!

ரெண்டு பேரும் சாதிச்சிருக்கறதை யார் வந்தாலும் முறியடிக்க முடியாது. அவங்க லெஜெண்ட்ஸ். இப்போ ஏப்ரல் பதினாலு வருஷப் பிறப்பு அன்னிக்கு பல ஹீரோக்களோட படங்கள் ரிலீஸ் ஆகும். அப்படித்தான் என்னோட படமும் ரிலீஸ் ஆகுது. பட விநியோகஸ்தர்கள் எல்லாம் சொல்லுவாங்க, பொங்கல், தீபாவளியை விட ஏப்ரல் பதினான்கு ஹாலிடே சீசன். வழக்கமான பண்டிகை கலெக்ஷனைவிட ஏப்ரல் ரிலீஸ் கலெக்ஷன் அதிகமா இருக்கும்னு. இதை மிஸ் பண்ணலாமா?

**இயக்குனர் ஷங்கரே தமது அந்நியன் படத்தின் வெளியீட்டைத் தள்ளி வைத்துவிட்டார். ரஜினியுடன் போட்டி போடத்தான், சச்சின் ரிலீஸ் என்று ரசிகர்களே பேசுகிறார்களே?**

ரசிகர்கள் பேசலாம். ஆனால் நிஜம்னு ஒண்ணு இருக்குல்ல! யாரோட யார் போட்டி போடுறது!

**விஜய்க்கு இதுவரை சரியான இயக்குனர்கள் அமையவில்லை. அமைந்திருந்தால், அவரது வேறொரு பரிமாணம்**

**வெளிப்பட்டிருக்கும் என்று பாசில் சொல்லியிருக்கிறாரே?**

இதை நான் முழுசா அப்படியே ஒத்துக்க மாட்டேன். நான் நடித்த ஒன்றிரண்டு படங்களைப் பார்த்துவிட்டு, 'என்ன இதுமாதிரி கதைகளில் நடிக்கிறார்' என்று அவர் நினைத்திருக்கலாம். நானே கூட ஃபீல் பண்ணியிருக்கிறேன். கதை கேட்கும்போது சில படங்கள் நன்றாக இருக்கும். படம் தயாரிப்பில் இருக்கும்போது தப்பான கதையைத் தேர்வு பண்ணிட்டோமோன்னு தோணும். இது மாதிரி தப்பு பண்ணின படங்கள் பத்து பர்சென்ட்தான். தொண்ணூறு பர்சென்ட் சரியா இருந்ததுனாலதான் நான் இந்த அளவு முன்னேறி இருக்கேன். நல்ல இயக்குனர்கள் அமையலேன்னா, இந்த விஜய் காணாமல் போயிருப்பான்.

**பாரதிராஜா, பாலுமகேந்திரா, மணிரத்னம் போன்ற முதல்தர இயக்குனர்கள் படங்களில் நடிக்கிற உத்தேசம் இருக்கிறதா?**

எல்லோரையும் போல எனக்கும் ஆசையிருக்கிறது. அதற்கு எல்லாம் நேரம் ஒத்துவர வேண்டும் இல்லையா?

**சூர்யா உங்கள் வயது நடிகர்தான். தோற்றத்தை மாற்றிக் கொண்டு, விதவிதமான கேரக்டர்களில் நடிக்கிறார். நீங்கள் அது போன்று எந்த முயற்சியும் செய்ததாகத் தெரியவில்லையே?**

எனது முகத்துக்கு மாறுபட்ட கதாபாத்திரங்கள் பொருந்துமா என்று எனக்கே உள்ளுக்குள் சந்தேகமாக இருக்கிறது. என்னைப் பொறுத்தவரைக்கும் அது ஒரு ரிஸ்க்கான மேட்டர்தான். அப்படியே செய்தாலும் எனது சொந்தப் பணத்தில்தான் தயாரிப்பேன்.

**'சுக்ரன்' படத்தில் தன்னம்பிக்கையை ஊட்டுகிற சிறப்பு வேடத்தில் நடித்திருக்கிறீர்கள். ஆனால் அதே படத்தில் கதாநாயகி பாலியல் பலாத்காரம் செய்யப்படும் காட்சிகள் அதீத ஆபாசமாக இருந்தன. இந்தக் காட்சிகளை சித்திரித்த விதத்தில் உங்களுக்கு உடன்பாடு உண்டா?**

ஒரு ரசிகனாக படம் பார்த்துவிட்டு நானும் கொஞ்சம் அதிர்ச்சியடைந்தேன். அதை அப்பாவிடம் தைரியமாகச் சொன்னேன். ஆனால் ஒரு டைரக்டர் கண்ணோட்டத்தில் அதற்கு விளக்கம் கொடுத்து என் வாயை அடைத்துவிட்டார். அதற்குமேல் அவரிடம் யாராலும் விவாதிக்க முடியாது.

**'சுக்ரன்' படத்தில் இறந்துபோன உங்கள் தங்கையின் படத்தின் முன்பு நின்று பிரார்த்தனை செய்துவிட்டு வெளியே புறப்படுவது போன்ற காட்சியில் அதிக ஈடுபாடு காட்டியிருக்கிறீர்களே?**

எனக்குப் பத்து வயதாக இருக்கும்போது தங்கை இறந்துபோனார். இளவயது என்பதால் அந்த இழப்பு அப்போது என்னைப் பெரிதாக பாதிக்கவில்லை. வயது ஆக ஆக எனக்கு ஒரு துணை இருந்திருக்கலாமோ என்று ஃபீல் பண்ணினேன். எங்காவது பாசமான அண்ணன், தங்கையைப் பார்க்கும்போது எனக்கு சிலிர்ப்பாக இருக்கும். எனது படங்களில் தங்கை கேரக்டரில் கொஞ்சம் ஈடுபாட்டோடு நடிக்க, தங்கையை இழந்த ஏக்கமும் ஒரு காரணம்னு சொல்லணும். சுக்ரன் படத்தில் முதலில் கடவுளிடம் பேசிக்கிற மாதிரி இருந்தது. அப்புறம்தான் தங்கையின் படத்தை சாமி படம் இருக்கும் இடத்தில் வைத்து ஷாட் எடுக்கலாம் என்றேன்.

பேட்டி : **ஜெய்**
படங்கள் : **ஸ்ரீஹரி**



"ஆனாலும் இந்த மெகா சீரியலை கொஞ்சம் ஓவராவே இழுத்தடிக்கிறாங்க!"
"எப்படிச் சொல்றே?"
"டைட்டில் சாங் முடிஞ்சதுமே 'தொடரும்'னு போட்டுட்டாங்களே!"
- குட்டி பிரசன்னா

# இரண்டு தூரிகை 'கல்'!

"பூமிக்குப் பல பிரத்யேக வர்ணங்கள் உண்டு. அந்த வர்ணங்களைத்தான் எனது ஓவியங்களில் நான் கொண்டு வந்திருக்கிறேன்'' என்கிறார் சாமெண்டு சோனாவானே. கடற்கரையின் ஒரு பகுதியைக் கிழித்து வந்து, அதையே தனது கான்வாஸாக மாற்றியிருக்கிறார். கரையில், அழகுபடுத்தப்பட்ட சிறிய சிறிய வண்ணக் கற்கள் மின்னிக் கொண்டிருக்கின்றன. சிப்பிகளைச் சேகரிக்கும் குழந்தையைப் போல இவர் தூரிகையால் இதனைச் சேகரித்திருப்பது தெரிகிறது. சற்று தொலைவிலிருந்து பார்க்கும்பொழுது ஒவ்வொரு சிறிய கல்லும் தனக்குரிய நிழலோடு கான்வாஸை விட்டுத் தனியே எழுந்து நிற்பதைப் போன்றதொரு உணர்வு ஏற்படுகிறது. பார்ப்பதற்கு எளிமையாக, எந்தவித ஆர்ப்பாட்டமுமின்றி இவரது ஓவியங்கள் அமைந்திருக்கின்றன.

ஆனால், இவருடைய மகள் லலிதாவின் ஓவியத்தை இவ்வாறு வகைப்படுத்த முடியாது. ''உள்ளதை உள்ளபடி நகலெடுக்கும் யதார்த்த ஓவியங்களைவிட நவீன பாணி ஓவியங்களே என்னை அதிகம் கவர்கின்றன. அவற்றில்தான் பல புதிய உத்திகளைக் கையாள முடியும், நிறைய முயற்சிக்க முடியும், நிறைய யோசிக்க வைக்கவும் முடியும்'' என்கிறார் இருபத்தி மூன்று வயதான லலிதா. அழுத்தமான சில வர்ணங்களைப் பதித்து, அதன் கலவைகளுக்கிடையே சில வெற்றிடங்களை எடுத்துக் காட்டுவது போல் இவரது நவீன ரக ஓவியங்கள் அமைந்திருக்கின்றன.



இரு ஓவியர்களும், மும்பையிலிருந்து தமது படைப்புகளை சென்னைக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். மியூசிக் அகாதமியிலுள்ள வின்யாசா ஆர்ட் காலரி, எப்போதும் இருப்பதைவிட சென்ற வாரம் சற்று வண்ணமயமாகவே தோன்றியது.

- கங்கா

படங்கள் : ஷிவ்

# தோழர்கள் ராஜ்ஜியத்தில் துள்ளுது இளமை!

இன்று பல கட்சிகளில் நாற்காலிகளை விடாமல் பெரிசுகள் நாட்டாமை செய்து கொண்டிருக்கும் நிலையில் மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அடுத்த தலைமுறையிடம் தலைமைப் பொறுப்பை ஒப்படைத்திருக்கிறது. உடல்நிலை மற்றும் முதுமை காரணமாக 89 வயது சுர்ஜித் பொதுச்செயலாளர் பதவியிலிருந்து விலக, 56 வயது பிரகாஷ்காரத் அந்தப் பொறுப்புக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். கட்சியில் அரசியல் தலைமைக் குழுவில் (பொலிட் பீரோ) ஐம்பது ப்ளஸ்கள் அதிகம் இடம் பெற, தோழர்கள் ராஜ்யத்தில் துள்ளுது இளமை.



காரத், ஆழ்ந்த சிந்தனையாளர். மார்க்ஸிய தத்துவங்களில் ஊறித் திளைத்தவர். கம்யூனிஸ்ட் இயக்கத்தின் மூத்த நட்சத்திர தலைவர்களான ஏ.எம்.எஸ் நம்பூதிரிபாடு, ஏ.கே. கோபாலன் ஆகியோருக்கு [illegible]ியாளராக இருந்து, அவர்களிடம் நேரி[illegible]க பெற்ற பயற்சியின் காரணமாக [illegible] மார்க்ஸியவாதியின் முழுப் பரிமாணமும் பெற்றவராக இருக்கிறார் காரத். பொதுச்செயலாளராக கடந்த 12 வருடங்களாக இருந்த சுர்ஜித்துக்கு கட்சியின் செயல்பாடுகளில் உதவி வந்ததன் மூலம், நிர்வாக ரீதியான விஷயங்களும் அவருக்கு அத்துப்படி.

காரத்தின் ஊர், கேரள மாநிலம் பாலக்காடு பக்கம் உள்ள எலப்பள்ளி கிராமம். அப்பா பத்மநாபன் நாயர் பர்மாவில் ரயில்வே அதிகாரியாக இருந்தவர். பர்மாவில் பிறந்த காரத்தை அம்மா ராதா, குழந்தையாக இருக்கும் போதே கேரளாவுக்கு அழைத்துக் கொண்டு வந்துவிட்டார். காரத்துக்கு ஒன்பது வயதாக இருக்கும்போது குடும்பம் சென்னைக்கு குடிபெயர்ந்தது. சேத்துப்பட்டு கிறித்துவப் பள்ளியிலும், தாம்பரம் கிறித்துவக் கல்லூரியிலும் அவரது படிப்பு தொடர்ந்தது.

கிறித்துவக் கல்லூரியில் படிக்கும்போது கம்யூனிஸ கொள்கைகள் மீது காரத்துக்கு ஒரு பிடிப்பு ஏற்பட்டது . நம்பூதிரிபாடு

"மூன்றாவது

அணியை

உருவாக்குவோம்!"

அவர்களின் பேச்சுக்களும், கட்டுரைகளும் அவரை மிகவும் கவர்ந்தன. இளங்கலை பட்டப் படிப்பில் சிறப்புத் தகுதியோடு தேர்ச்சிப் பெற்றார் காரத். சென்னை வாசத்தின் போது மறைந்த மார்க்ஸிஸ்ட் பிரமுகர் வி.பி. சிந்தனோடு பழகும் வாய்ப்பு காரத்துக்குக் கிடைத்தது. அதுதான் காரத் தின் வாழ்க்கையில் பெரிய திருப்பம். இன்று சிகரத்தைத் தொட்டு விட்டார்.



* காரத்

மார்க்ஸிஸ்ட் கட்சியில் மற்றொரு அதிசயமும் நடந்திருக்கிறது. ஆணாதிக்கம் கோலோச்சிக் கொண்டிருந்த அரசியல் தலைமைக் குழுவில் 17 பேரில் ஒருவராக முதல்முறையாக பெண் ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். அவர் பிருந்தா காரத். தில்லி பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்தபோது காரத்துடன் காதல் ஏற்பட, எளிய முறையில் திருமணம் நடந்தது. ஜனநாயக மாதர் சங்கத்தின் அகில இந்தியச் செயலாளராக



* பிருந்தா காரத்



இருந்து, மிக அழுத்தமாகச் செயல்பட்டு வந்திருக்கிறார் பிருந்தா. பலமுறை சிறைவாசம், கைது என்று பழக்கப்பட்டுப் போனவர். இயக்கப் பணிகளுக்கு எங்கே தடையாக இருக்கப் போகிறதோ என்று பிரகாஷ் - பிருந்தா தம்பதி குழந்தை பெற்றுக் கொள்வதைத் தவிர்த்துவிட்டார்கள்.

பிரகாஷ் காரத்துக்குப் பெரிய பொறுப்பு காத்திருக்கிறது. காங்கிரஸை நீண்ட காலத்துக்கு ஆட்சிப் பொறுப்பில் அமர்த்தி அதற்கு வலு சேர்த்து விடக்கூடாது; அதற்காக அவசரப்பட்டுப் போய் கவிழ்த்து, பா.ஜ.க.வுக்கு மீண்டும் பாதை போட்டு விடவும் கூடாது. இதனால்தானோ என்னவோ ''மூன்றாவது அணி உருவாக்க முயல்வோம்'' என்று சொல்லியிருக்கிறார். இதைப் பயன்படுத்திக் கொண்டு ஜெ. காரத்தைச் சந்திக்க முயற்சி நடந்தது. ஆனால் காரத் இப்போது ஜெ.வைச் சந்திப்பது ஆளும் கூட்டணிக்குத் தவறான ஸிக்னல் கொடுக்கும் என்பதால் சந்திப்பு தவிர்க்கப்பட்டது. இருந்தும் அகில இந்திய அரசியலில் குட்டையைக் குழப்பி மீன் பிடிக்கும் ஜெ. முயற்சி தொடர்கிறது.

காரத்தே சொல்லியிருப்பது போல இந்திய மையப் பிரதேசத்தில் கட்சி இன்னும் நன்றாக கால் ஊன்ற வேண்டும். இடதுசாரிகள் குறைந்தது 150 இடங்களில் வென்றாலொழிய மூன்றாவது அணியைப் பற்றிப் பேச முடியாது.

- ப்ரியன்



# சந்திரமுகி

**ரிக்ஷாகாரர்:** இன்னாபா! 'பேய் வீடு', 'பதிமூனாம் நம்பரு வீடு', 'திகில் பங்களா'னு எத்தனை தபா பார்த்துருக்கோம்! இந்த மாதிரி ஆவிக் கதையிலே நடிக்கிறதுக்கு எதுக்குப்பா சூப்பர் ஸ்டாரு?

**மெக்கானிக்:** நல்லவேளையா ஆவி அடைஞ்சு கெடக்குற அரண்மனையிலே, கோரப்பல்லோட பேய் எதுவும் இல்லே. முப்பதடியிலே ஒரு கிராபிக்ஸ் பாம்பை புஸ் புஸ்னுன்னு ஊதவுட்டு, கதைக்கு டெம்போ குடுக்குறாரு டைரக்டரு! அதுவும் யாரையும் கடிக்கலே!

**ஆட்டோ டிரைவர்:** "தேவுடா! தேவுடா! ஏழுமலை தேவுடா! சூடுடா! சூடுடா! எங்க பக்கம் சூடுடா"னு திருப்பதி பெருமாளை தொணைக்குக் கூப்பிட்டு பாடுறாரு பாரு ஒரு பாட்டு! வெவசாயிலேருந்து முடி வெட்டற ஆளு வரைக்கும் வளைச்சுப் போட்டிருர்றாரு. வித்யாசாகர் வெளுத்து வாங்கிட்டாரு சார்!

**ரஜினி ரசிகர்:** பாபா மாதிரி சந்திரமுகியிலே தலைவரு ஏமாத்திடலே! ஒவ்வொரு படத்துலேயும் வில்லனை பிளான் பண்ணி ஒழிக்கிற தலைவரு, மந்திரவாதிகூட சேர்ந்துகிட்டு இதுல ஆவி விரட்டுறது ரொம்பவே லோக்கல் ஜோலி. ஆனா நல்லாவே பண்ணிஇறாரு! வேட்டை ராஜாவா வந்து, சந்திரமுகி காதலனை தல தனியா முண்டம் தனியா வெட்டுற சீன் வரும் போது பக்குனு இருக்குப்பா!

**ஓர் உதவி இயக்குனர்:** கதைஉ ரொம்பப் பழசு! தான் திரைக்கதையிலே பழுத்த பழம்னு நிரூபிச்சிருக்கார் வாசு. பிரபு ஃபேமிலி வேட்டைக்காரன் அரண்மனையை வாங்கி குடியேறப் போறாங்கன்னு சொன்னவுடனேயே, பில்ட்-அப்பை ஆரம்பிச்சுடறார். ஆவியக் காட்டப் போறாரா இல்லே ஆவி பிடிச்ச ஹீரோயினை காட்டப் போறாரான்னு பெரிய எதிர்பார்ப்பை உண்டு பண்ணிடுறார். அதேமாதிரி கடைசி இருபது நிமிசம் தியேட்டர்லே பின் டிராப் சைலன்ஸ்!

**ரிசப்ஷனிஸ்ட்:** சந்திரமுகி ஆவி பிடிச்சு, ஸ்பிரிட் பர்சனாலிட்டி வர்றப்போல்லாம், உலுக்கி எடுக்கறாங்க ஜோதிகா! படத்துலே சூப்பர் ஸ்டார் ஜோதிகாதான்.

**குடும்பத்தலைவி:** ரஜினியோட தரத்துக்கு இவ்ளோ தரம் தாழ்ந்து போய் டபுள்மீனிங் டயலாக் பேசலாமா? பலசமயம் குமட்டுது!

**உளவியல் மருத்துவர்:** பொதுவா இதுமாதிரிப் படங்களில், பேயை விரட்ட வர்ற மந்திரவாதியும், "இல்லே, இது மனநோய்"னு மறுத்து சண்டை போடுற டாக்டரும் மோதிக்குவாங்க. இதுலே இரண்டு பேரும் கை கோத்துக்கிறது ரொம்பப் புதுசா இருக்கு.

தொகுப்பு: **விஷ்ணுவல்தாசன்**

• ஆவரெஜ்









## சீனாவின் சாமர்த்தியம்!

**சீ**ன அதிபரின் வருகையும் அதையொட்டி கையெழுத்தான ஒப்பந்தங்களும் நமது அயலுறவுத் துறையின் மிகப் பெரிய வெற்றியாகக் கொண்டாடப்படுகின்றன. உண்மையில், இந்த விஷயத்தில் வெற்றி சீனாவுக்குத்தான். அப்படியானால், இந்தியாவுக்குத் தோல்வியா என்கிற கேள்வி எழும். நம் நாட்டுக்குத் தோல்வி இல்லை என்றபோதிலும் இந்த ஒப்பந்தங்களால் பெரிய முன்னேற்றம் ஏற்பட்டுவிட்டதாக நாம் மகிழ முடியாது. மாறாக, சீனாவிடம் முன்னைக் காட்டிலும் எச்சரிக்கையாகவே நாம் இருக்க வேண்டும். காரணங்கள் என்ன..?

சில மாதங்களுக்கு முன்னர்தான் சீனா நம் மீது 'ஒரு குண்டைத் தூக்கிப் போட்டது'! நம் நாட்டைச் சேர்ந்த சிக்கிம்மை, தனது நாட்டு வரைபடத்தில் தனி, நாடாகவே காட்டியிருந்தது. இதனை ஆட்சேபித்து நிறைய குரல்கள் எழுந்தன. ஆனால், அப்போதெல்லாம் அசைந்து கொடுக்காமல், அமுக்கறாங்கிழங்காக இருந்த சைனா, இப்போது திடீரென்று அந்த வரைபடத்தைத் திருத்தி வெளியிட முன் வந்திருக்கிறது. சிக்கிம்மை இந்தியப் பகுதியாகவே காட்ட இப்போது சம்மதித்திருக்கிறது.

சர்வதேச எல்லைக்கோடு என்பது, ஏதோ கபடி விளையாட வரைந்த கோடு என்பது போல் அதனைத் தனதிஷ்டத்துக்குச் சீனா மாற்றுவதும் திருத்துவதும் அநியாயம்! சீனாவின் திடீர் அந்தர்பல்டிக்குக் காரணம் நமது பேச்சுவார்த்தை முயற்சிகளோ அல்லது அயலுறவுக் கொள்கையின் வலிமையோ அல்ல. அவ்வாறு இருந்திருக்குமாயின் நாம்



# கல்கி




2005 ஏப்ரல் 24
பார்த்திப சித்திரை 11
மலர் : 63
இதழ் : 39


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




மகிழலாம். ஆனால், நிஜ காரணம், நம் நாட்டுடன் பல தொழில் ஒப்பந்தங்கள் செய்து கொள்ளும் நிர்ப்பந்தம் இப்போது சீனாவுக்கு ஏற்பட்டிருக்கிறது என்பதுதான். அந்தக் காரியத்தைச் சாதித்துக் கொள்வதற்காக, ஏதோ மிகுந்த பெருந்தன்மையுடன் நமது சிக்கிம் பகுதியை நமக்குத் திருப்பித் தந்ததுபோல் சித்திரித்து, ஒருவித கலகலப்பையும் நல்லுணர்வு பெருக்கத்தையும் செயற்கையாகத் தூண்டியிருக்கிறது. உண்மையில், சீனா தான் செய்த தவறைத் திருத்திக் கொண்டிருக்கிறது ; அவ்வளவுதானேயொழிய, இந்தியாவிடம் பெருந்தன்மை எதுவும் காட்டிவிடவில்லை.

இன்னும் சொல்லப்போனால், இந்தோ-சீன யுத்தத்தின்போது சீனா கைப்பற்றிய இந்திய நிலப்பகுதி இன்னமும் சீனாவசம்தான் இருக்கிறது. அப்போது, தோழமை கொண்டாடுவதாகக் காட்டிக் கொண்டு நமது நாட்டு ராணுவத்தையும் அரசையும் ஏமாற்றி, எல்லைப் பகுதியை ஊடுருவி ஆக்கிரமித்தது சீனா. அமெரிக்க உதவியை நாடித்தான் சீன துருப்புகள் மேலும் முன்னேறாமல் நம்மால் தடுக்க முடிந்தது.

இப்போது நம்முடன் வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்து கொண்டுள்ள சீனா, இந்தப் 'பழைய' எல்லைத் தகராறு பிரச்னையைத் தீர்க்க மட்டும் முன்வரவேயில்லை. மிகப் பெரிய கண் துடைப்பாக, இப்பிரச்னையை விவாதிக்க இரு நாட்டுப் பிரதிநிதிகள் நியமிக்கப்பட்டு, அவர்கள் அடிக்கடி கூடுவார்கள், பேசுவார்கள், எல்லைப் பிரச்னையால் வன்முறை அல்லது போர் மூள விடாமல் எச்சரிக்கை காப்பார்கள் என்றெல்லாம் பட்டியலிடப்பட்டிருக்கிறது.

ஆக, சீன அதிபர் வருகையால் ராணுவ அல்லது எல்லைப் பாதுகாப்பு ரீதியாக இந்தியாவுக்கு எந்த ஆதாயமும் இல்லை. நமது ராணுவச் செலவினங்கள் குறையப்போவதுமில்லை.

சரி, தொழில் - வர்த்தக ஒப்பந்தங்களிலாவது ஆதாயம் உள்ளதா என்று பார்த்தால் அங்கும் ஏமாற்றமே. இந்தியா உற்பத்தி செய்யும் மென்பொருளை சீனா தனது தொழில்வளப் பெருக்கத்துக்கும் ஏற்றுமதி பெருக்கத்துக்கும் பயன்படுத்திக் கொள்ளப் போகிறது. சீனா நம்மிடம் வாங்கப் போவது பெரும்பாலும் கச்சா பொருள்களாகவே இருக்கும். குதிரே முக்கின் இரும்புக் கனிமம், கோவையில் விளையும் பருத்தி போன்றவற்றை நாம் சீனாவுக்கு விற்க, அவற்றை மதிப்புக் கூட்டி பயனீட்டுப் பொருள்களாக்கி, நம்மைப் போல் பல மடங்கு லாபம் காணப் போவது சீனாதான்.




இந்த நல்லுறவு ஒப்பந்தம் மூலம், சீனாவின் பொருளாதார முன்னேற்றத்துக்குத் தோள் கொடுத்துத் தூக்கிவிட்டுவிட்டு, இந்தியா இருக்கிற இடத்திலேயே இருந்துவிடும் அபாயம் மிக அதிகம்.

ஏற்கெனவே சீன உற்பத்திப் பொருள்கள் உலகெங்கிலுமுள்ள நுகர்வோர் சந்தையில் வெள்ளமெனப் புகுந்து வியாபித்துள்ளன. இந்திய நுகர்வோர் சந்தையையும் ஆக்கிரமித்து விட்டன. நமது பட்டு, பருத்தி ஆடை நெசவுத் தொழிலுக்கு, சீனாவின் முன்னேறிய நெசவு, பின்னலாடைத் தொழில் துறைகள் கடும் போட்டியாகத் திகழ்கின்றன. இந்தப் போட்டி மேலும் பல துறைகளுக்கும் பரவும்.

கம்யூனிஸ நாடான சீனாவில் மக்கள் ஆங்கிலம் பயில வற்புறுத்தப்படுகிறார்கள். இன்னும் பத்தாண்டுகளில், இந்திய இளைஞர்களின் கைவசமுள்ள மென்பொருள் எழுதும் தொழில் பிரிவை சீன இளைஞர்கள் மிகச் சுலபமாகக் கைப்பற்றிவிடுவார்கள். அதற்குரிய தொழில்நுட்பத்தைப் பெற இன்று அஸ்திவாரம் போட்டாகிவிட்டது!

நமது ஜனத்தொகை ஒரு பக்கம் பெருகிக் கொண்டிருக்க, சீனாவைக் காட்டிலும் கூடுதல் ஜனத் தொகையும் வேலைவாய்ப்பின்மையும் சேர, இந்தியா அவதியுறுவதற்கான வாய்ப்பு அச்சுறுத்துகிறது.

பிரதமர் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இந்தியப் பொருளாதாரத்தை நிர்ணயிக்கும் அல்லது கட்டுப்படுத்தும் பலத்தை சீனா பெற்றுவிட்டால் அப்புறம் அந்த அடிமைத்தனத்திலிருந்து விடுபட ஒரு நவீன சுதந்திர இயக்கம் தேவைப்படும். இதற்கெல்லாம் நாம் இடங்கொடுத்துவிடக் கூடாது. அமைதி ஒப்பந்தங்கள் அவசியம்தான். அவற்றைத் தொழில் - வர்த்தக ஒப்பந்தங்களுடன் இணைக்காமல், முதலில் அரசியல் ரீதியான நல்லுறவை உத்தரவாதமாக்கிக் கொண்டு, பின்னர் கவனமாக, நமக்கும் ஆதாயம் விளையும் வகையில் தொழில் - வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்து கொள்வது நல்லது.

நடந்து முடிந்தவற்றை நாம் ரத்து செய்துவிட முடியாது. ஆனால், அதனால் விளையக் கூடிய தவறுகள், தீமைகளை எதிர்பார்த்து எச்சரிக்கையாய் இருக்கலாம். பிரதமர் மன்மோகன் சிங் பதில் விஜயமாக சீனா செல்லும்போது, இனி தொடரப்போகும் தொழில்-வர்த்தக ஒப்பந்தங்களை, இந்தியாவின் கை ஓங்குவதற்கான வகையில் அமைக்கும்படி வற்புறுத்தலாம். ●

# சச்சின்

ஒருநாள் போட்டிக்கு டிக்கெட் கிடைத்த மகிழ்ச்சியோடு இருக்கையில் அமர்ந்தால், ஐந்துநாள் டெஸ்ட்மேச் நடந்த மாதிரி அப்படியொரு அலுப்பு. மனசுக்குப் பிடித்த மைதானம்தான். குளுகுளு உதகையில் கனவுகளை உற்பத்தி செய்கிற கல்லூரி வளாகம். பிட்ச் (கதை)? ஆடி ஆடிப் பழகின அதே ஈகோ காதல்.

நாயகன், நாயகி பாத்திரங்களை கொஞ்சம் யதார்த்தம் நிறைய



ஃபாண்டஸி என்ற கலவையில் செதுக்கியிருக்கிறார்கள். இதனால் விஜய் - ஜெனிலியா ஜோடியின் இனிமையான மோதலையும் காதலையும் சச்சின் - சேவாக் இணை போல ரசிக்க முடிகிறது. ஸ்டார் பேட்ஸ் விஜய், வெளிப்படையான துருதுரு பேர்வழி. இளமையாகவும் இருக்கிறார். எனினும் 'கில்லி', 'திருப்பாச்சி' படங்களில் அவர் அரிவாள் பிடித்த வேகம் நம் நினைவுகளில் மோத, இன்னொரு பக்கம் இந்தப் படத்திலும் தனது ஆக்ஷன் இமேஜை உடும்புப் பிடியாக அப்படியே பற்றியிருப்பதால், அவரை ஒரு கல்லூரி மாணவராகப் பார்க்க முடியவில்லை. எனினும் முதல் பந்தில் தொடங்கி, கடைசிப் பந்துவரை விளாசுகிறார். ஆனால் ஆட்ட நாயகன் விருதை அள்ளிக் கொண்டு போய் விடுகிறார் ஒளிப்பதிவாளர் ஜீவா. ஊட்டியை அதன் பனிப்புகை மற்றும் மேகக் கூட்ட வருடலோடு இத்தனை அழகாக யாரும் காட்டவில்லை.

இரண்டாவது பெரிய விக்கெட் ஜெனிலியா. சும்மா சொல்லக் கூடாது! க்ளைமாக்ஸ் காட்சியைத் தவிர்த்து, ஒட்டு மொத்த குழந்தைத்தனத்தையும் குத்தகைக்கு எடுத்த மாதிரி விஜய்க்கு சமமாக நின்று ஆடுகிறார். வெகு ஸ்மார்ட்டான உடைகளில் கல்லூரிக்கு வந்து காலேஜ் ப்யூட்டி என்று பெயர் வாங்கிவிட்டு, வீட்டில் சின்னஞ்சிறு ஸ்கர்ட் அணிந்து, முகத்துக்கு கடலை மாவு ஃபேஸ் பேக் பூசிக் கொண்டு, வசீகரா பாடலுக்கு நடனமாடும் அழகில் இளமையின் குறுகுறுப்பு.

பிபாசா பாசு, ரகுவரன், மோகன்சர்மா போன்ற பெரிய நட்சத்திரங்கள் அணிக்கு வலு சேர்க்கவில்லை. இதை ஈடுகட்டும் விக்கெட் காப்பாளராக வடிவேலு. விஜய்யின் ரோமியோ டெக்னிக்குகளை காப்பியடிக்கப் போய் நிலை குலைந்து பரிதபமாகத தடுமாறும் பல காட்சிகள் சிக்ஸர்கள்.

செட் என்று அப்பட்டமாகத் தெரியும், தோட்டாதரணியின் கலை இயக்கம் க்ளீன்போல்டு என்றால், சிங்கிள் ரன்களாக மட்டையைத் தட்டி மண்டையைக் காய வைக்கும் இசை, தேவிஸ்ரீ பிரசாத்துடையது.

எல்லோரையும் போல காதல்தான் எனக்கும் பிடித்த மைதானம் என்று மிகச் சுமாரான திரைக்கதையோடு சமாளிக்க முயற்சித்திருக்கிறார் அணியின் கேப்டன் (இயக்குனர்) ஜான். பிரதான பாத்திரங்களுக்கு இடையிலான உணர்வுச் சங்கிலி அங்கங்கே அறுந்து தொங்குவதால், அவரது பகீரத முயற்சி ரசிகர்களுக்கு அயர்ச்சியை தந்து விடுகிறது.

- விஷுவல்தாசன்

● ஆவரெஜ்

## தேடல் கதை!



# குப்பை!

பி.மாரிமுத்து

மாலை நான்கு மணி. சுள்ளென்று வெயில் அடித்தது. அண்ணா சாலை. காமராஜ் அரங்கம் அருகில் உள்ள ஒரு நடைபாதை. டில்லி ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தான். இரவில் பேப்பர் பொறுக்குவான். பகலில் அதில் கிடைக்கும் வருமானத்தில் குடித்துவிட்டு, பேருந்து, லாரி என கனரக வாகனங்களின் இரைச்சல், புகை, சுட்டெரிக்கும் வெயில் இதையெல்லாம் மீறி அசந்து தூங்குவான்.

டில்லிக்கு இலேசாக விழிப்பு வந்தது. கண்களை கசக்கிக் கொண்டான். கண்கள் இரண்டும் சிவப்பேறி இருந்தன. தாறுமாறாக வளர்ந்து கிடந்தது தலைமுடி. திப்பி திப்பியாக அழுக்கேறிப்போன உடம்பு. நைந்து நூலாய்ப் போன சட்டை, அழுக்கேறிய வேஷ்டி என அலங்கோலமாக எழுந்தான்.

டில்லிக்கு வயிறு பசிக்க ஆரம்பித்தது. சட்டைப் பையைத் துழாவினான். இரண்டு ரூபாய் சில்லறை அகப்பட்டது. அதை எடுத்துக் கொண்டு டீக்கடைக்குப் போனான். நாலைந்து கப் தண்ணீர் மொண்டு குடித்துவிட்டு, ஒரு டீ வாங்கிக் குடித்தான்.

வாய் நம... நம... என்றிருந்தது. கீழே அணைந்து கிடந்த துண்டு பீடியை எடுத்துப் பற்ற வைத்து இழுத்து சுகமாக புகைவிட்டான்.

தன் கோணிப்பையை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டான். நீளமான கட்டையில் ஊசி சொருகி வைத்திருந்தான். அதையும் எடுத்துக் கொண்டான். வழியில் கிடக்கும் வாட்டர்

பாக்கெட்டுகளை, அந்த ஊசியில் குத்தி எடுத்து கோணியில் போட்டுக் கொண்டான். ஒவ்வொரு குப்பைத் தொட்டியாய் கிளறிக் கொண்டே சென்றான். அதில் கிடக்கும் பேப்பர், பிளாஸ்டிக், பீர்பாட்டில் எல்லாவற்றையும் எடுத்து கோணியில் போட்டபடி நடக்கலானான்.

மணி எட்டைத் தாண்டிவிட்டது. மயிலாப்பூர் லஸ்சைத் தாண்டி கச்சேரி சாலையை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான் டில்லி. பசி காதை அடைத்தது. வெறுப்பாக வந்தது அவனுக்கு. 'என்ன மானங்கெட்ட பொழப்பு இது!' சலித்துக் கொண்டான். 'நாலு பேரைப் போல நல்லா சாப்பிட்டு வாழ வழியில்லாமப் போச்சே! ம்! எல்லாம் தலை எழுத்து! ஏதாவது யாவாரம் பண்ணி சம்பாதிக்கலாம்ன்னு பாத்தா, நாளொண்ணுக்கு இருபது ரூபா கூட தேற மாட்டேங்குது. அது வாய்க்கும் வவுத்துக்கும் சரியாப் பூடுது!' யோசித்தபடி நடந்தவன் சட்டென்று நின்றான். குனிந்தான். கூர்ந்து பார்த்தான். கையில் எடுத்துப் பிரித்தான். கசங்கிய நூறு ரூபாய் நோட்டு! 'சாமி, முருகா, நூறு ரூபாய்' மறுபடி உற்றுப் பார்த்தான். சந்தோஷத்தில் மனசு குதியாட்டம் போட்டது.

ஏதோ சத்தம் கேட்டு பார்த்தான். ஒரு பெண், கூடை நிறைய வேஸ்ட் பேப்பரை கொட்டிக் கொண்டிருந்தாள். எல்லாம் துண்டு பேப்பர். பக்கத்தில் ஏதோ ப்ரஸ் உள்ளது போல.

அந்தப் பேப்பரை அள்ள இரண்டடி நடந்தான். பசித்தது. கையில் உள்ள ரூபாய் நோட்டைப் பார்த்தான். 'சாப்பிட்டுட்டு அள்ளிக்கலாம். யாரு எடுக்கப் போறா!' என்று சாப்பாடுக் கடையை நோக்கிப் போனான்.

அருகிலேயே ஒயின் ஷாப். மனசு சண்டித்தனம் பண்ண, ஒரு கட்டிங் வாங்கி அடித்தான். ஒரு பிரியாணி பொட்டலம் வாங்கினான். ருசித்துச் சாப்பிட்டான். வயிறு 'டொம்' என்று உப்பியிருக்க, ஏப்பம் விட்டு எழுந்தான். மீதி சில்லறைக்கு ஒரு பீடிக்கட்டும், தீப்பெட்டியும் வாங்கினான். ஒரு பீடியைப் பற்ற வைத்து இழுத்தான். மேகத்தில் மிதப்பது போல் சுகமாக இருந்தது.

கோணிப்பையை தோளில் மாட்டியபடி நடந்தான். கூடவே நடந்த நாயை விரட்டியபடி, குப்பைத் தொட்டி பக்கமாகப் போனான். பேப்பர்க் குவியலை அள்ளவா, வேண்டாமா என்று யோசித்தான்.

'நாளைக்கு, பாத்துக்கலாம்' என்று முடிவு செய்து திரும்பினான்.

மறுநாள் அதே அண்ணா சாலை பிளாட்பாரம். கண் விழித்தான் டில்லி. பசி வயிற்றைப் பிறாண்ட சட்டைப் பையைத் தடவினான். மூன்று ரூபாய் சில்லறை இருந்தது. டீ குடித்தான். தாடியைச் சொறிந்தபடி கோணிப் பையுடன் நடக்க ஆரம்பித்தான்.

டில்லியின் கண்கள் பேப்பரை விடுத்து, எங்காவது கசங்கிய நூறு ரூபாய்த் தாள் கிடைக்குமா என்று தேட ஆரம்பித்தன. ●



''பேஷண்ட் உயிர்பிழைக்க ஸ்கோப் இல்லேன்னு எதை வைச்சு சொல்றீங்க டாக்டர்?''

''ஸ்டெதாஸ்கோப் வைச்சுதான்...''

- வி.எஸ்.அனந்தராமன்

தன்னிகரில்லாத தனிச் சிறப்புக்குரியவை தமிழின் ஐம்பெருங்காப்பியங்கள்!
உலக இலக்கிய மரபில் ஒரு புதுமையைத் தோற்றுவித்த இவை, காலத்தால் அழியாதவை!!

# ஐம்பெருங்காப்பியங்கள்

மூலமும் தெளிவுரையும்
உரையாசிரியர் :
பேராசிரியர் ஜெ. ஸ்ரீசந்திரன்

2500 பக்கங்களுக்குமேல் 5 தொகுதிகளில்
விலை ரூ. 650
**சலுகை விலை ரூ. 325**



- சீவகசிந்தாமணி
- சிலப்பதிகாரம்
- மணிமேகலை
- வளையாபதி
- குண்டலகேசி

*சீவக சிந்தாமணிக் காப்பியத் தலைவனான சீவகன்* உண்மையிலேயே *தன்னேரில்லாத் தலைவன்* ஆவான். பிற காப்பியங்கள், தலைவன் என ஒருவரைப் புகழ்ந்தபோதிலும் அடுத்த நிலையில் பலரையும் சேர்த்துப் பேசும். ஆனால் சிந்தாமணியோ சீவகன் பிறந்தது முதல் முக்தி அடையும் வரை அப்பெருந்தலைவனையே சுற்றிச் சுற்றி வருகிறது. இளமை நிலையாமை, அழகு நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை என எதுவுமே நிலை இல்லை யென்றாலும் இந்நிலையாமையை உணர்ந்து அதுகொண்டு நிலைத்த கடவுள் தன்மையை அடையும் வழியை வற்புறுத்திக் கூறுவதே இக்காப்பியத்தின் நோக்கமாகும்.

புதுமைத் தெய்வம் கண்ணகியின் புகழ் கூறும் சிலப்பதிகாரத்தின் சிறப்புக்கு, அதன் சொற்செட்டு ஒரு காரணம்! பாரதியார் 'சொல்லை இழைத்துச் சுந்தரமாம் ஒரு காப்பியம் செய்தார்' என இளங்கோவடிகளைப் பாராட்டுகிறார். எடுத்துக் காட்டாக, ஏழே சொற்களில் ஒரு வழக்கையே முடித்துக் காட்டுகிறாரே, அந்த ஒரு நிகழ்ச்சியைச் சுட்டிக் காட்டலாம். கண்ணகியின் முறையீட்டைக் கேட்டு, *யானோ அரசன்?* எனத் தனக்குள்ளேயே ஒரு விவாதம் (Argument); *யானே கள்வன்!* என ஒரு தீர்ப்பு (Judgement); *கெடுக என் ஆயுள்!* என ஒரு தண்டனை (Punishment)! இப்படி மூன்றே தொடரில்- அதாவது ஏழே சொற்களில் ஒருவரின் மேன்மையை வெளிப்படுத்திய காப்பியம் சிலப்பதிகாரம். ஊழ்வினையின் மாற்றொணா வலிமையை இக்காப்பியம் எங்கும் காணலாம். ஆயினும் ஒழிக்க வொண்ணா விதியையும் வென்று கண்ணகி நல்லாள் இறுதியில் கடவுளாகக் காட்சி தருகிறாள். **பெண்ணுக்குப் பெருமை தரும் முதல் காப்பியம் இது.**

உண்டி கொடுத்து உயிர் கொடுத்த உத்தமியின் திறம் பாடும் மணிமேகலைக் காப்பியத்தில் சிறைக்கோட்டம் அறக்கோட்டமாகிறது. காப்பியத்தலைவி மணிமேகலை, பசிக்கொடுமையைப் போக்குகிறாள். சாதுவன், மதுவை ஒழிக்கிறான். ஆபுத்திரன், சாதியைச் சாடுகிறான். இவ்வாறு காப்பியத்தில் பல மாந்தரை உலவவிட்டுத் தம் காப்பியத்தையே ஒரு புரட்சிக் காப்பியமாக அமைத்த பெருமை சாத்தனாருக்கு உண்டு.

அறமும் அறிவும் புகட்டிக் கலை மாண்பும் காட்டுகின்றன வளையாபதி, குண்டலகேசி காப்பியங்கள்.

---

தபாலில் பெற, கடிதம் எழுதுக.
ஐந்து தொகுதிகளையும் வி.பி.பி.யில் அனுப்புகிறோம்.
சலுகை விலை ரூ.325 + தபால் மற்றும் கட்டுச் செலவு ரூ. 50 சேர்த்து ரூ.375 மட்டும் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறலாம்.

கடிதம் எழுத வேண்டிய முகவரி:
**வர்த்தமானன் பதிப்பகம்,**
40, சிரோஜினி தெரு, தியாகராய நகர்,
சென்னை - 17.

சென்னையில் உள்ளோர் **24364174** என்னும் தொலைபேசி எண்ணில் தொடர்பு கொள்க!
5 தொகுதிகளையும் உங்கள் இல்லத்திற்கே நேரில் கொண்டு வந்து தருகிறோம்.
சலுகை விலை ரூ. 325 மட்டும் ரொக்கமாகக் கொடுத்தால் போதுமானது.

நேரில் பெற

சென்னை : வர்த்தமானன் (✆ : 24364174)
கோவை : விஜயா பதிப்பகம் (✆ : 2382614 / 2394614)
சேலம் : சந்திரா (✆ : 2265635)
திருச்சி : திருச்சி புக் ஹவுஸ் (✆ : 2764198 / 2482365)
மதுரை : செல்வி (✆ : 2343510 / 2340413)
நெல்லை : அருள் நந்தி சிவம் (✆ : 2339692)

ஆகிய இடங்களில் சலுகை விலை ரூ. 325யினை மட்டும் ரொக்கமாகச் செலுத்தி 5 தொகுதிகளையும் உடனே பெற்றுக் கொள்ளலாம்.

**இச்சலுகை 5.5.2005 வரை மட்டுமே!**

# விடுதலைப் புலிகளுடன் முத்தையா முரளீதரன்!

நம்ம ஊரு மாப்பிள்ளையாகிவிட்ட ஸ்ரீலங்கா கிரிக்கெட் வீரர் முத்தையா முரளிதரனின் வாழ்க்கை வரலாற்றை, இரண்டு பத்திரிகையாளர்கள் இணைந்து எழுதிக் கொண்டிருக்கிறார்கள். இருவரில் ஒருவர் சென்னையைச் சேர்ந்த இளம் பெண் பத்திரிகையாளரான டிஷானி தோஷி. இதற்காக மூன்று தடவை ஸ்ரீலங்காவுக்குச் சென்று வந்திருக்கிறார். இதில் ஒரு தடவை முத்தையா முரளீதரனுடன், விடுதலைப்புலிகளின் கட்டுப்பாட்டில் உள்ள ஸ்ரீலங்காவின் வடக்குப் பகுதிக்கும் சென்று வந்திருக்கிறார்.

"'கிரிக்கெட்டில் நிற பேதம்' என்கிற சப்ஜெக்ட்டில் ஆராய்ச்சி செய்து, ஒரு கட்டுரை எழுதும் நோக்கத்துடன் ஸ்ரீலங்காவுக்குச் சென்றபோது முரளீதரனைச் சந்தித்தேன். அவரிடம் பேச்சோடு பேச்சாக, அவரது வாழ்க்கை வரலாற்றை புத்தகமாய்க் கொண்டு வரும் பட்சத்தில், நான் உதவி செய்வதாகக் கூறினேன். சுமார் ஒன்றரை வருடங்களுக்கு முன்பு, முரளீதரனிடமிருந்து அழைப்பு வந்தது.

**"முரளீதரனின் வால்தனத்துக்கு அளவே கிடையாது."**

தம்மைப் பற்றிய புத்தகத்தில், கிரிக்கெட் அல்லாத மற்ற விஷயங்களைப் பற்றி எழுதும் பொறுப்பை, எனக்குக் கொடுத்தார் முரளீதரன். சந்தோஷமாய் சம்மதம் தெரிவித்தேன்.

ஸ்ரீலங்காவின் கிரிக்கெட் அணியில் தமிழர்கள் அதிக அளவில் இடம் பெற்றதில்லை. ஆனால் தமது கடுமையான உழைப்பு, இடைவிடாத முயற்சியின் மூலமாக, அதனைச் சாதித்தவர்



* குழந்தைகளுடன்...




வுடன், முந்தைய பள்ளிக்கூட சாதனையை முறியடித்ததில் ஆரம்பித்து, மாவட்ட அள வில் ஆடி, படிப்படியாக முன்னேறி, ஸ்ரீலங்கா அணி யில் இடம் பெற்றது வரை, சுவையான கதை போல அவர்கள் விவரித்தனர்.

அடுத்தமுறை நான்



முத்தையா முரளீதரன். சிறிய வயதிலிருந்தே கிரிக் கெட்டில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தவர் முரளீ தரன் என்பது அவருடைய பெற்றோரிடமும், பள்ளிக் கூட ஆசிரியர்களிடமும் பேசியபோது தெரிய வந் தது.

கண்டிதான் முரளீ தரனுக்குச் சொந்த ஊர். நான்கு பேர் கொண்ட குடும்பத்தில் மூத்த பையன் முரளீதரன். அவரும், அவரு டைய இரண்டாவது தம்பியும், சிறு வயது முதலே படிக்க போர்டிங் ஸ்கூலுக்கு அனுப்பப்பட்டு விட்டனர். முரளீதரனின் அம்மாவிடம், ''நாலு பேரில், இந்த இரண்டு பேரை மட்டும் ஏன் ஹாஸ் டலுக்கு அனுப்பி விட்டீர்கள்?'' என்று கேட்டேன்.

"இவங்க ரெண்டு பேரும் வால் பசங்க. அதிலும் முரளீதரனின் வால்தனத்துக்கு அளவே கிடையாது. வீட்டில் அவர்களை சமாளிக்க முடியாமல்தான் ஹாஸ்டலுக்கு அனுப்பி விட்டேன்'' என்றார்.

அவர் படித்த பள்ளிக்கூட ஆசிரியர், பிரின்ஸ்பால், ஹாஸ்டல் வார்டன் ஆகியோரையும் நான் சந்தித்தேன். கிரிக் கெட்டில் முழுமையான ஈடுபாடு கொண் டிருந்த முரளீதரன் தமது திறமையால், பள்ளிக்கூட அணியில் இடம் பிடித்த

* டிஷானி தோஷி

முரளீதரனைச் சந்திக்க ஸ்ரீலங்கா சென்றபோது, மிக வும் திரில்லான அனுபவம் கிடைத்தது. அப்போது, அவர் ஐ.நா. சபை, வடக்குப் பகுதியில் செயல்படுத்தி வரும் 'ஐ.நா. சபை உணவுத் திட்டத்தின்' பிரதிநிதியாக வடபகுதியில் பயணம் மேற் கொண்டார். போன இடங் களில் எல்லாம் முரளீ தரனுக்கு அமோக வரவேற்பு. சின்னஞ்சிறு பிள்ளைகள்கூட அவரைப் பார்த்ததும், ஓடி வந்து, அவரது கால்களைக் கட்டிக் கொண்டன. இளைய தலைமுறையினர், கை குலுக்கி சந்தோஷப்பட்டனர். பெண்கள் அவருக்கு திருஷ்டி சுற்றிப் போட்டு, வாழ்த்தி



''குற்றப்பத்திரிகை வாங்க மாட்டேன்னு தலைவரு, நீதிபதி கிட்ட தகராறு பண்றாராமே!''

''எந்தப் பத்திரிகையா இருந்தாலும் வீடு தேடி வந்து குடுக்கறதுதான் மரியாதைன்னு கறாரா சொல்லிட்டார்ல''

- நெல்லிக்குப்பம் வி. மோகன்

''நீங்க பெட்டி வாங்கிக்கிட்டு கட்சி மாறினதா வந்த செய்திக்குக் கொடுத்த மறுப்பு, இந்த பத்திரிகையில வந்திருக்கு தலைவா; ஆனா...?''

''ஆனா என்ன...?''

''அதையும் பெட்டிச் செய்தியா போட்டிருக்காங்க தலைவா!''

- சீர்காழி வி. ரேவதி



மகிழ்ந்தனர்.

கடுமையான கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்ட பகுதிகளில்கூட, ஸ்ரீலங்கா ராணுவத்தினர், முரளீதரனுடன் சிரித்தபடி போஸ் கொடுத்து போட்டோ எடுத்துக் கொண்டனர். ஸ்ரீலங்கா ராணுவக் கட்டுப்பாட்டுப் பகுதியையடுத்து, யாருக்கும் சொந்தமில்லாத நிலப்பகுதி. அதைக் கடந்தால் எல்.டி.டி.ஈ.யினரது முழுமையான கட்டுப்பாட்டில் இருக்கும் பகுதி ஆரம்பமாகிறது. விடுதலைப்புலிகள் அமைப்பின் ராணுவத்தினரும் சிரித்தபடி, முரளீதரனை வரவேற்று, அளவளாவினார்கள். ஃபோட்டோக்கள் எடுத்துக் கொண்டனர்.

ராணுவம், புலிகளுக்கு இடையிலான போரின் காரணமாக சிதிலமடைந்து கிடக்கும் யாழ்ப்பாணக் கோட்டையை, பிரத்யேக அனுமதியின் பேரில் நாங்கள் சுற்றிப் பார்த்தோம். குண்டுகள் தாக்குதலுக்குள்ளான சுவர்களைக் கிட்டத்தில் பார்த்தபோது, முரளீதரன் சோகத்தில் ஆழ்ந்துவிட்டார்.

தமிழ் கிராமங்களில் இருந்த சிறுவர்களை வைத்துக் கொண்டு, இவர் பந்து வீச, அவர்கள் அடித்து, சந்தோஷப்பட்டனர். அவர்கள் பந்து வீச, இவர் அவுட் ஆனபோது, அவர்கள் முகத்தில் ஏற்பட்ட பெருமையைப் பார்க்க வேண்டுமே!

போரில் கை, கால்களை இழந்தவர்களைப் பார்த்துவிட்டு, மனம் கலங்கிப் போனார் முரளீதரன். விடுதலைப்புலிகள் இயக்க அரசியல் பிரிவின் துணைத் தலைவரான சுதாமாஸ்டரையும், முரளீதரன் சந்தித்து உரையாடினார். இவரது தர்மசங்கடமான கேள்விகளுக்குக்கூட, சுதாமாஸ்டர் கோபப்படாமல் பதில் சொன்னது, புலிகள் மத்தியில்கூட முரளீதரன் பிரபலமாக இருப்பதன் அடையாளம். முரளீதரனின் மேனேஜர் குஷில் குண சேகர. அவருடன் இணைந்து ஆரம்பித்துள்ள 'முரளீதரன் - குண சேகர ஃபவுண்டேஷன்' மூலமாக ஏழை எளிய மக்களுக்கு முரளீதரன் செய்துவரும் சேவை மகத்தானது. குறிப்பாக குழந்தைகளின் கல்வி, உணவு, உடல்நலனுக்கு என்று மொத்தம் தொண்ணூறு கிராமங்களில் சேவை செய்து வருகிறார்.

முதல் தடவை, முரளீதரனின் அம்மாவைப் பார்த்தவுடன், ''கல்யாணம் பண்ணிக்கச் சொல்லறோம்! இவன் பண்ணிக்க மாட்டேங்கிறான்!'' என்று ஆதங்கப்பட்டார். நல்லகாலம்! புத்தக வேலை முடிவதற்குள், நம் ஊர் மலரின் கழுத்தில் தாலி கட்டிவிட்டார்!''

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

# கோபுரம்

## மஞ்சள் தூள் மற்றும் குங்குமம்






பூஜை, பண்டிகை
சுபகாரியங்களுக்கு சிறந்தது.

தயாரிப்பாளர்கள் : **Y.V. சேஷாசலம் & கோ.,** சென்னை-1, போன் : 25293942, 25293041

---



# பரவசம்
### தொடர்கிறது...

**ஹை-வே டவுன்**
மஹிந்திரா சிட்டி அருகில், G.S.T. ரோடு

## ஸ்ரீ மாதவா நகர்
## ஸ்ரீ கேசவா நகர்
## ஸ்ரீ கோவிந்தா நகர்

(DTCP Approved Housing Plots)

சென்னை-செங்கல்பட்டு தென்னக அக நெடுஞ்சாலையில் மிகப்பெரிய தொழில் நகரமாக உருவாகி வரும் மஹிந்திரா சிட்டிக்கு மிக அருகாமையில் அமைந்து வரும் ஹைவே டவுனில் முதலீடு செய்யுங்கள். விரைவிலேயே பன் மடங்கு பெருகும்.
பரவசமளிக்கும் இம்மனைப்பிரிவை பார்வையிட்டால் முடிவெடுக்க வசதியாய் இருக்கும்.

## சீரடி சாய் நகர்

(CMDA Approved Housing Plots)

பாரத் பொறியியல் கல்லூரி அருகில், சேலையூர், சென்னை – 600 073.

| | | |
|---|---|---|
| மனைவாங்க நிதியுதவி | Sundaram Home Finance Limited | HOME FINANCE IDBI HOME FINANCE |

இலவசமாக மனையைப் பார்வையிட தொடர்பு கொள்ள :

Ph: **2435 7721 / 31 / 61**  **98406 22308 / 93805 59482**




**BLB Estates (P) Ltd.**

Behind Apollo Speciality Hospital, Teynampet, Chennai-18.
E-mail : blbestmail@vsnl.net www.blbestates.com

நன் மதிப்பில் முதலீடு



• காதலின் மடியில்...!

● பா.சு. மணிவண்ணன், திருப்பூர்.

? பள்ளிகளில் ஆன்மிகக் கல்வி கற்றுத் தரும் காலம் வருமா...?

! முதலில் கழிப்பறைகளைக் கட்டி, சுகாதாரத்துக்கு வழி வகுக்கட்டும், அப்புறம் ஆன்மிகத்துக்கு வரலாம்.

● மகா, திருப்பூர்.

? ஓரினச் சேர்க்கையைச் சட்டபூர்வமாக்கக் கோரும் கோரிக்கை பற்றி...?

! இயற்கை விதிகளுக்கு விரோதமானவற்றுக்குச் சட்டபூர்வமான அங்கீகாரம் அளிப்பது என்பது, சமுதாயத்தின் தற்கொலை. ஒன்றில் தொடங்கும்; ஆனால் ஒன்பதிலும் முடியாமல் தொடரும். சமுதாயச் சீரழிவும்கூட.



• காந்திய வழியில்...

● ஆர்.எம்.சு. மலை, நல்லான்பட்டி.

? 'காந்தி' படத்தில் நடித்த பென் கிங்ஸ்லி, பாலஸ்தீனியர்களுக்கு காந்திய வழியில் பயிற்சி அளிக்கிறாராமே?

! தென்னாப்பிரிக்காவில், மண்டேலாவும் அமெரிக்காவில் மார்ட்டின் லூதர் கிங்கும் கையாண்டு மாபெரும் வெற்றி பெற்றனர். அதே அளவுக்கு பாலஸ்தீனியருக்கும் பென் கிங்ஸ்லியால் நம்பிக்கையூட்ட முடியுமென்றால், காந்தியத்துக்கு மற்றொரு வெற்றி கிட்டும்.

● எஸ். அசாதி, பிள்ளையார்குளம்.

? ஆளுங்கட்சியாக மாற வேண்டுமானால், சித்தாந்தத்தைச் (கட்சிக் கொள்கையை) சற்று விட்டுக் கொடுக்கத்தான் வேண்டும் என்கிறாரே அத்வானி?

! 'அப்படி விட்டுக் கொடுத்தால் பா.ஜ.க தலைமையையே விட்டுக் கொடுக்க வேண்டும்' என்று ஆர்.எஸ்.எஸ் பயமுறுத்துகிறதே!

● ரா. சாலமோன், ஆலங்குளம்.

? புது (?) மணத் தம்பதியான சார்ல்ஸ்- கமீலாவுக்கு எப்படி வாழ்த்து கூறுவீர்கள்...?

! காலமெல்லாம் காதல் வாழ்க!

# சார்ல்ஸ் - கமீலாவை எப்படி வாழ்த்தலாம்...?

● வீ. முத்தையா, திருநெல்வேலி.

? பெண்கள் வேலைக்குச் செல்வதால், ஆண்களின் வேலைவாய்ப்பு பறி போவதாக 'துக்ளக்'கில் ஒரு கட்டுரை வந்ததே... உங்கள் கருத்து...?

! கட்டடப் பணியிலும் விவசாயப் பணியிலும் பெண்கள் ஈடுபடுவதில்லை என்று ஒரு மாதம்... ஒரே மாதம் தீர்மானித்தால் போதும்... இவர்களுடைய அபத்தவாதம் வாலைச் சுருட்டிக் கொள்ளும். இந்த ஆண்கள் கவலைப்படுவதெல்லாம், ஏ.சி அறையில் ஃபேனுக்குக் கீழே கிடைக்கும் வேலை பற்றித்தான்.

# நீங்கள் கேட்டவை
## –தராசு

● எஸ். நாராயணன், சென்னை - 91.

? ஜார்க்கண்ட் பையன் 'தோனி'யின் விளாசல் எப்படி...?

! 'ஜோர்'கண்ட்!

● டி. முருகேசன், திருவாரூர் - 1

? விவேக் ஓபராய் விளம்பரம் தேடுவதாக ஜெயலலிதா குற்றம் சாட்டியுள்ளாரே...?



* பாராட்டு மழையில்...!

! ஹஹஹா... ஹி... ஹி... ஹி...! ஆலய பராமரிப்புக்கான அரசின் திட்டங்களைக்கூட தமது படத்துடன், தமது திட்டங்கள் போல் கோயில் வாசலிலேயே விளம்பரப் படுத்திக் கொள்ளும் 'ஜெ' சொல்கிறார்... ஹ... ஹ... ஹ... ஹோ...ஹோ...ஹோ...!

● வே. முருகேசன், சென்னை - 88.

? பத்மஸ்ரீ, பத்மவிபூஷண் பட்டங்களைத் தங்கள் பெயர்களின் முன்னாலோ, பின்னாலோ போட்டுக் கொள்ளக்கூடாது என்கிறார்களே... அப்படியானால் அந்தப் பட்டம் எதற்கு?

! அங்கீகாரத்துக்கு மட்டும்தான். விளம்பரத்துக்கு அல்ல.



* மாயையின் வலையில்...!

● ஜே. துரைராஜ், சென்னை - 116

? ஸ்ரீநகரில் பயணிகள் ரிசப்ஷன் சென்டரை பயங்கரவாதிகள் தாக்கியது பற்றி...?

! பயங்கரவாதிகளின் அச்சுறுத்தல் இருப்பது அறிந்தும் இந்தத் தாக்குதலை எதிர்பார்த்துத் தவிர்க்க முடியாமல் போனது எத்தனை சோகமோ, அத்தனைக்கு ஆனந்தம், திட்டமிட்டபடி பேருந்து சேவை தொடங்கியது.

● ஈ.டி. தயாளன், சென்னை -12.

? 'திரைப்படங்களில் மட்டுமே ஊழலையும் சுரண்டலையும் எதிர்த்துப் போராடிய நான், இனி நிஜ வாழ்விலும் அவ்வாறு செய்வேன்' என்கிறாரே விஜயகாந்த்?

! விஜயகாந்த்தின் நோக்கம் உயர்ந்தது. அதற்கு அரசியலை விடவும் திரைப்படத் துறையே மேலான சாதனம். அதனை நல்ல நோக்கம் உடையவர்கள்கூட சிறந்த முறையில் பயன்படுத்தாததுதான் வேதனை.



* பெருகும் விழி நீரில்...!



* சாம்பல் பொடியில்...!

● பொன்விழி, அன்னூர்.

? வோட்டுப் போட்டு ஜெயிக்க வைத்த மக்களுக்கு எம்.எல்.ஏக்கள் விசுவாசமாக இருக்கிறார்களா...?

! வோட்டுப் போட்டவர்களுக்கு விசுவாசமாக இருந்தால் போதாது தாயே! தமக்கு வோட்டுப் போடாத மக்களுக்கும் தாம்தான் பிரதிநிதி என்று உணர்ந்து, அவர்களுக்கும் விசுவாசமாக நடந்து

கொள்ள வேண்டும். அதுதான் ஜனநாயகம். அப்படி யாரும் இன்று இருப்பதாகத் தோன்றவில்லை.

● சிவகாமி சுந்தர், மதுரை - 16.

? ஃபீனிக்ஸ் பறவையாக மீண்டும் வருவேன் என்கிறாரே ஜெ...?

! அப்படியானால், இப்போது தாம் சாம்பலாகி வருவதாக ஒப்புக் கொள்கிறாரா என்ன...?!



● ஆர்.எஸ்.எஸ். பிடியில்...!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? 'ஒரு பெண், தான் காதலிப்பவனின் பெயரைக் காவல் நிலையத்தில் பதிவு செய்ய வேண்டும். இதன் மூலம், காதலிக்கும் நபர் அந்தப் பெண்ணை ஏமாற்றி விடாமல் தடுக்க முடியும்' என்று மேற்கு மண்டல ஐ.ஜி சுப்பிரமணியம் கூறியது சாத்தியமாகுமா...?

! காதலுக்குக் காவல் துறை சாட்சியா...? கெட்டது குடி! நம்பிக்கையின் அடிப்படையில் அல்லாமல், இந்த மாதிரி சந்தேகத்தின் அடிப்படையில் ஆரம்பிக்கும் 'காதல்', காதலாகவும் இருக்க முடியாது; வெற்றி பெறவும் முடியாது.

● வே.நா. கதிர்வேல், வேலூர்.

? அரசியல் என்பது மக்கள் சேவையா? தொழிலா? வியாபாரமா?

! முந்தா நாள்: மக்கள் பணி, நேற்று: தொழில்; இன்று: வியாபாரம்; நாளை: சூதாட்டம்.

● எச். ஆண்டனி தமிழரசன், மும்பை - 17

? வீரப்பனின் மனைவி முத்துலட்சுமி சினிமாவில் நடிக்கப் போகிறாராமே...?

! குற்றம் அவருடையது அல்ல. வீரப்பனின் காட்டு தர்பாரை வைத்துச் சம்பாதித்தவர்கள், முத்துலட்சுமியின் கண்ணீர்க் கலயத்தை வைத்துச் சம்பாதிக்கவும் ஆசைப்படுகிறார்கள். தேறாது. டி.வி சீரியலில் ட்ரை பண்ணிப் பார்க்கலாம்!

● ப. காளிதாசன், நீர்விளங்குளம் ❒

? தமிழ் சினிமா ஹீரோ - ஹீரோயின்களுக்குக் கட்டாயம் தமிழ் தெரிந்திருக்க வேண்டும் என்று சட்டம் கொண்டு வந்தால்...?

! பா.ம.கவின் அடுத்த போராட்டம் இதற்காகவும் இருக்கலாம். அப்படி ஒரு சட்டம் வந்தால், ஹாலிவுட், பாலிவுட் இறக்குமதிகள் கோலிவுட்டில் தமிழ் 'கற்று', பேச முற்பட்டு, அதைக் கொலை செய்வார்கள்.

● ஆர். நாகராஜன், சென்னை - 117

? வாஜ்பாய், மன்மோகன் சிங் - பிரதமர் பதவிக்குப் பொருத்தமானவர் யார்...?

! அந்த இருவரையும் மட்டும் வைத்துத் தராசை உயர்த்திப் பார்த்தால், முள் இம்மிகூட பிசகாமல் மையத்தில் நிற்கிறது. ஆனால் இதை அனுமதியாமல், எம்பித் தாவி இரு தரப்பிலும் தராசு தட்டைப் பற்றிக் கொண்டு தொங்குகிறவர்களையும் சேர்த்து எடை போட்டால், மன்மோகனுக்கே மதிப்பு கூடுகிறது.

❒ ரூ 100 பரிசு பெறுபவர்:
ப. காளிதாசன்,
நீர்விளங்குளம்,
வேட்டனூர் அஞ்சல்,
அத்தானி வழி,
புதுக்கோட்டை மா.வ 614 630.

* ரூ 50 பரிசு பெறுபவர்:
ஜே. துரைராஜ்,
57/1, முதல் தெரு,
பாக்யலக்ஷ்மி நகர்,
ஆலப்பாக்கம்,
சென்னை - 600 116.




15% ஆம்
85% இல்லை

# சர்ச்சை சர்வே 3 ரிசல்ட்!

## ரூ.100 பரிசு பெறும் வாசகர் கருத்துகள்

### ஆம்

மிகச் சிறந்த மொழியை அதே மாநிலத்தில் கல்வியிலிருந்துகூட ஒதுக்க மெல்ல இனி அது சாகட்டும் என்னும் நிலைக்கு வந்த பின்பும், அவசியமா என்னும் வினா அசட்டுத் தனமானது.

- பி. பத்மா, கோவை - 641009

### இல்லை

'மொழிப்போர்' என்ற வார்த்தையே அபத்தம். 'மொழி வளர்ப்பு' என்பதே சரி. போர் என்றால் கொலை, வன்முறை, மரணம், ரத்தக் களறி என்பது நிதர்சனம்.

என். சாந்தா, கடலூர் - 1

## பிரசுரத்துக்குத் தேர்வானவை...

### ஆம்

இந்தியா மற்றும் உலகமெங்கும் தாய் மொழியை மதித்து வளர்க்கும்பொழுது இங்கே ஊனப்படுத்தும் வில்லத்தனத்துக்கும் உறக்க நிலைக்கும் மாறுதல் காணும், களை பிடுங்கும் பணிதான் இது. சரியான தருணம். சரியான செயல்.

- டி. சீனிவாஸ் சுதர்சனன், கோயம்புத்தூர்.

சுயநலமிகள் தாய்க்கே ஸ்லோ பாய்ஸன் தரும்பொழுது காப்பாற்றும் முதலுதவி கூடச் செய்யாவிடில் எப்படி?

- பத்மா திருமலை, கோயம்புத்தூர்

தமிழோசை தரணியில் மெட்டி ஒலியாகயில்லாமல் முத்துமணி கோர்த்த இனிய சலங்கை ஒலியாக கேட்டுக் கொண்டேயிருக்க இத்தமிழ்ப் போர் மிக அவசியம், சாரி, அவசரம்!

- எஸ். சுந்தர், திருநெல்வேலி

### இல்லை

வீதியின் பெயரில் சாதியை நீக்கியும், ஓய்ந்ததா சாதிச் சண்டை? வாதிடல் எதுவும் மாறாது, மாறாது, வாழ்ந்து காட்டுதலே வழி.

- சங்கரி வெங்கட், சென்னை-63

நமக்கு நன்மை எல்லா மொழிகளுமே என்பதை தமிழர்கள், அனுபவ அறிவால் உணர்ந்து விட்டனர். அரசியல்வாதிகளால் உணர்த்தப்பட வேண்டிய அளவுக்கு உறங்கிவிடவில்லை!

- அரிமா மு. முரளீதரன், சென்னை - 67

நம் தமிழ்நாடு எல்லாவிதமான மொழிகளையும் ஆதரிக்கும் நாடு. அன்னபூர்ணி நாடு. ஜாதிமத பேதமில்லாமல் ஒருமித்து செயல்படுவதுதான் பண்பு.

- எஸ். தனலட்சுமி, பெங்களூர் - 76

# நடக்குமென்பார்; நடக்கும்!



**மேஷம் :** பொன்னான வாரம். மனத்தில் தைரியமும் தன்னம்பிக்கையும் ஏற்படும். பண வரவுகள் ஏற்படும். உத்தியோகத்தில் உள்ளவர்களுக்கு இடமாற்றம் ஏற்படும். சகோதரர் வழியில் சகாயம் ஏற்படும். நண்பர் உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். புதிய தொழில் தொடங்க நல்ல நேரம்.



**ரிஷபம் :** ஏற்றம் மிகுந்த வாரமாக அமையப் போகிறது. பற்றாக்குறை இல்லை. குடும்பத்தில் நல்ல காரியம் கைகூடும். தாயின் உடல் நிலையில் சற்று கவனம் தேவை. தொழில் செய்பவர்கள் சற்று நிதானத்துடன் செய்வது நல்லது. நண்பர்களால் அனுகூலம் உண்டு. சில நண்பர்கள் விலகிச் செல்வார்கள். கணவர், மனைவி ஒற்றுமை பலம் பெறும். தொழில் துறையில் உள்ளவர்கள் கவனமுடன் செயல்படுவது நல்லது.



**மிதுனம் :** உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற்றங்கள் வரலாம். பண வரவு போதுமானதாக இருக்கும். மாணவ மாணவிகளுக்கு உன்னதமான நேரம். புதிய முயற்சிகள் நிறைவேறும். தொழில் துறையில் உள்ளவர்கள் நல்ல முன்னேற்றம் காண்பார்கள். குடும்பத்தில் சுபகாரியம் நடக்கும். கலைஞர்கள் ஏற்றம் காணும் வாரம்.



**கடகம் :** இந்த வாரம் மேன்மையான வாரம். வாக்கு, தனம், புகழ், கீர்த்தி உண்டாகும். வீடு வாசல் வழியில் நல்ல திருப்பங்கள் ஏற்படும். குழந்தைகள் நலனில் அக்கறை செலுத்துவது நல்லது. மூலதனம் போட்டு தொழில் செய்ய நினைப்பவர் மனைவி பெயரில் செய்யவும். கூட்டுத் தொழிலில் எச்சரிக்கை அவசியம். கணவர் மனைவி இருவரும் விட்டுக் கொடுத்துச் செல்வது நல்லது. மனக்கசப்பு வரும். லேவா தேவி தொழில் செய்பவர்கள் உஷார். குருபகவானுக்கும் சனிபகவானுக்கும் விளக்கு ஏற்றுவது நல்லது.



**சிம்மம் :** அற்புதமான வாரம். கோர்ட்டு, வழக்கு விவகாரங்கள் வெற்றி பெறும். யாரிடமும் அதிகம் பேசக் கூடாது. கணவர் மனைவிக்குள் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. குடும்பத்தில் திருமணம் கைகூடும். உத்தியோகத்தில் இடமாறுதலுடன் சம்பள உயர்வும் கிட்டும். மாணவ மாணவிகளுக்கு பொன்னான வாரம். ஆரோக்கியத்தில் கவனம் தேவை. தந்தை வழியில் சகாயம் ஏற்படும். வெளிநாட்டு வேலைவாய்ப்பு சிலருக்கு வீட்டுக் கதவைத் தட்டும்.



20.4.2005 முதல் 26.4.2005 வரை



**கன்னி :** ஏற்றமும் இறக்கமும் உள்ள வாரம். குழப்பமும், முடிவு எடுக்க முடியாத சூழ்நிலையும் இருக்கும். மாணவ மாணவிகளுக்கு தேவையில்லாத தலைவலி வரும். குடும்பத்தில் கணவர் மனைவி இருவருக்கும் சச்சரவுகள் ஏற்படும். பொறுமை அவசியம். உடல்நிலையில் கோளாறுகள் வரும். வேலையில் நெருக்கடி இருக்கும். சிலருக்கு வேலையை விட வேண்டிய சூழ்நிலை உருவாகும். குரு, சனி வழிபாடு அவசியம்.



**துலாம் :** நன்மையான வாரம். புதிய முயற்சிகளில் வெற்றி பெறுவீர்கள். குடும்பத்தில் குதூகலம் நிரம்பி வழியும். மாணவ மாணவிகளுக்கு நினைத்தது நடக்கும். சொத்துக்கள் வாங்க முயற்சி எடுக்கலாம். தடைகள் வராது. பணப்பற்றாக்குறை வராது. நண்பர் உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். சுபகாரியம் கைகூடும். பிரிந்த குடும்பம் ஒன்று சேரும். குருவழிபாடு செய்யவும்.



**தஞ்சை பரத்வாஜ்**



**விருச்சிகம் :** செவ்வாய் 4ம் இடம் செல்வதால் சிலருக்கு இட மாற்றம் ஏற்படும். சுபகாரியம் கைகூடும். உத்தியோகஸ்தர்களுக்கு இடமாற்றம் வர வாய்ப்பு இருக்கிறது. குழந்தைகள் வழியில் இருந்த மனக் கவலை விலகும். தாயாரின் உடல்நிலை சற்று கவலைக்கிடமாக இருக்கும். அடிக்கடி மனக் குழப்பங்கள் வந்தாலும் சற்று நேரத்தில் சரியாகும். சனி பகவான், ராகு, கேது வழிபாடு செய்வது நல்லது.



**தனுசு :** உத்தியோக மாற்றம் ஏற்படும். திருமண ப்ராப்தம் ஏற்படும். சிலர் சுற்றத்தாரால் அனுகூலம் பெறுவார்கள். தைரியமும் தன்னம்பிக்கையும் மிகுந்து காணும். தந்தை வழியில் நற்பலன் ஏற்படும். வியாபாரம் செய்பவர்களுக்கு தொழிலில் இருந்த மந்தகதி மாறும். கணவர் மனைவி ஒற்றுமை ஏற்படும். கலைஞர்களுக்கு நல்ல காலம். குருபகவான், சனிபகவான் வழிபாடு செய்வது நல்லது.



**மகரம் :** இந்த வாரம் சோதனைகளைத் தந்தாலும் சில சாதனைகளைச் செய்து முடிப்பீர்கள். பேச்சில் நிதானம் அவசியம். மாணவ மாணவிகள் நுழைவுத் தேர்வில் வெற்றி பெறுவார்கள். சிலருக்கு சொத்துக்



# வாசகர்கள் சந்தேகங்கள்-

**● என் காதலிக்கு பூராட நட்சத்திரம். 'பூராடம் நூலாடாது' என்று என் வீட்டில் மறுக்கிறார்கள். இது உண்மையா?**

**- என். கண்ணன், சென்னை-43**

சுத்தமான மூடநம்பிக்கை. பூராடம் என்பது சுக்கிரனின் நட்சத்திரம். இந்த நட்சத்திரக்காரர்களுக்கு தங்க நகைகள் அதிகம் அணியும் ராசி உண்டு. அதிகமான நகைகள் காரணமாக கழுத்திலணியும் மங்கலச் சரடு அசையக் கூட இடமிராது என்பதைத்தான் அப்படிக் கூறி வந்தார்கள். அதன் அர்த்தம் பிறகு திரித்துக் கூறப்பட்டு விட்டது.

**● 'ஆண்மூலம் அரசாளும், பெண் மூலம் நிர்மூலம்' என்பது உண்மையா?**

**- எம். குமார், போரூர்**

ஆனி மாதத்து மூல நட்சத்திரத்தில் பிறந்தவர்களுக்கு ராஜயோகம் உண்டு. ஆனி மூலம் என்பது ஆண் மூலமாக மருவி விட்டது. புரட்டாசி மாத மூலத்தில் (கன்னி மாதம் என்பார்கள்) பிறந்தவர்கள் ஓரளவுக்கு உதவாக்கரைகளாக இருப்பார்கள், அதைத்தான் அப்படிச் சொன்னார்கள்.

**● என் மகளுக்கு செவ்வாய் தோஷம் உண்டா? திருமணம் எப்போது? மேற்படிப்பை பூர்த்தி செய்வாளா?**

**- டி.ஆர்.நாகராஜன், சென்னை-64**

உங்கள் மகளுக்கு மே.2006க்குப் பின் திருமணம் நடக்கும். செவ்வாய் தோஷம் உள்ளது. வெளியூர் வரன் அமையும். மேற்படிப்பு சீக்கிரம் முடியும்.

**● என் அண்ணா, தங்கை இருவருக்கும் திருமணம் எப்போது நடைபெறும்? தோஷம் ஏதும் இருக்கிறதா?**

**- பெயர் வெளியிட விரும்பாத வாசகர், அமைந்தகரை**

அண்ணனுக்கு 35 வயதுக்குள் சென்னையில் பிறந்த பெண் அமையும். செவ்வாய் தோஷமுள்ள பெண் தேடவும். சனி தசை தற்போது நடக்கிறது. தங்கைக்கு தோஷமேதும் இல்லை. 28 வயதில் மேற்கிலிருந்து வெளியூர் வரன் வந்து திருமணம் முடியும்.

**● என் மகள் நன்றாகப் படித்திருந்தும் நல்ல வேலை கிடைக்கவில்லை. எதிர்காலம், திருமணம் பற்றித் தெரிவிக்கவும்.**

**- பெயர் வெளியிட விரும்பாத வாசகர், குழித்துறை**

உங்கள் மகளுக்கு ஜூலை, 2005க்குள் வெளிநாட்டு நிறுவனத்தில் வேலை கிடைத்து வெளிநாடு செல்வாள். சிறப்பான எதிர்காலம் உண்டு. திருமணமும் நல்ல படியாக அமையும்.

**● என் மகன் சுவாமிநாதன் கடை வைத்து நடத்துகிறான். மந்த நிலை மாறவும், திருமணம் பற்றியும் தெரிவிக்கவும்.**

**- என்.எஸ். பாலசுப்பிரமணியன், சென்னை - 33**

சுவாமிநாதன் தன் பெயரில் தொழில் நடத்த முடியாது. வேறு பெயரில் உணவு, ஏஜன்ஸி, கமிஷன், தொழில் செய்யலாம். 26.6.05க்குப் பின் முன்னேற்றம் உண்டு. ஆஞ்சநேயர் வழிபாடு நலம் சேர்க்கும்.

**● என் கணவரைப் பிரிந்து வாழ்கிறேன். என் குழந்தைகளின் ஜாதகங்கள் மட்டுமே உள்ளன. எங்கள் எதிர்காலம் பற்றிக் கூற வேண்டுகிறேன்.**

**- என் சீதாலட்சுமி ராஜபாளையம்**

குழந்தைகள் ஜாதகப்படி தந்தை ஸ்தானம் வலுவிழந்து, கஷ்டங்கள் சேருவதாக உள்ளது. மகள் உயர்ந்த கல்வியும், 21 வய

கள் வாங்கும் வாய்ப்பு ஏற்படும். குழந்தைகள் வழியில் மகிழ்ச்சி பொங்கும். உத்தியோகஸ்தர்களுக்கு விரும்பிய இடத்திற்கு மாற்றம் கிடைக்கும். பொருளாதாரக் கஷ்டங்கள் விலகும்.

**கும்பம்** : எதிலும் மனதை ஒருநிலைப் படுத்திச் செயல்படுவது நல்லது. அவசரப்பட்டு முதலீடு செய்ய வேண்டாம். கைப்பொருள் மீது கவனம் அவசியம். குடும்பத்தில் விட்டுக் கொடுத்துச் செல்வது நல்லது. மனத்தில் தைரியம் தேவை. தொழில் செய்பவர்கள் மனைவி பெயரில் செய்யவும். தொழிலில் எச்சரிக்கை

# தஞ்சை பரத்வாஜ் பதில்கள்!

துக்கு மேல் தந்தையால் அனுகூலமும் பெறுவாள். நல்ல எதிர்காலம் உண்டு. மகன் அயல்நாட்டு வேலை வாய்ப்பு பெறுவான். எஞ்சினியரிங் கல்வியும், நல்ல எதிர்கால மும் பெற்று தாயாருக்கு உறுதுணையாக இருப்பான். ராகு, துர்க்கை வழிபாடு செய் வது நன்மை தரும்.

**● *22.10.97ல் என் திருமணம் நடந் தது. எங்கள் ஜாதகங்களைப் பார்த்து குழந்தை பாக்கியம் உண்டா என்று தெரி விக்க வேண்டுகிறேன். பரிகாரம் ஏதும் தேவையா?***

**- வி. ரெங்கநாதன், பெங்களூர் - 40**

38வது வயதில் உங்களுக்கு குழந்தை பாக்கியம் உண்டு. அசுவனி, மகம், மூலம் - நட்சத்திரத்தில் ஆண் குழந்தை பிறக்கும். பரிகாரம் ஏதும் தேவையில்லை.

**● *என் மகன் வக்கீலாக வேலை செய்கிறான். 31.19.02ல் அவனது திரு மணம் நடந்தது. புத்திரப் பேறு அவனுக்கு உண்டா என்றும், அவனது தொழிலில் எதிர்காலம் பற்றியும் அறிய விழைகிறேன்.***

**- கே.எஸ். வரததேசிகன், சென்னை - 4**

உங்கள் மகனுக்கு 2005 முடிவதற்குள் குழந்தைப் பேறு ஏற்படும். ஆண் குழந்தை பிறக்கும். 2006ல் மகனின் தொழிலில் முன்னேற்றம் கூடும். நல்ல எதிர்காலம் உண்டு.

**● *ஸ்வீகாரத் தாயாரின் ஆதரவில் இருக்கிறேன். 8 வருஷங்களாக முயன்றும் திருமணம் கைகூடவில்லை. நல்ல வேலையும் இல்லை. என் எதிர்காலம் பற்றிக் கூறவும்.***

**- வி.என்.ராதாகிருஷ்ணன், சென்னை - 34**

15.1.2008 வரை உங்கள் சிரமதசை நடக்கும். அதன்பின் திருமணமும், முன் னேற்றமும் கூடும். ஸ்வீகாரத் தாயார் 2006ல் உங்களைப் பிரிவார். உங்கள் 42 வயது வரை யோகமில்லை. பின்னர் 25 வருஷங்கள் நன்றாக இருக்கும். எந்தப் பரிகாரமும் பலனில்லை.

**● *நான் செய்த கூட்டுத் தொழிலில் நஷ்டமடைந்து, இப்போதைய தொழில் வருமானமும் போதவில்லை. இந்நிலை யில் திருமணம் கூடி வருகிறது. செய்து கொள்ளலாமா? என் நிலைமை எப்போது மாறும்?***

**- பெயர் வெளியிட விரும்பாத வாசகர், டி.என்.பாளையம்**

உங்கள் பெயரில் சொந்தத் தொழி லில் லாபம் இராது. திருமணம் செய்து கொண்டு மனைவி பெயரில் மாற்றுத் தொழில் செய்தால் நல்ல முன்னேற்றம் கிட்டும். கூட்டுத் தொழில் வேண்டாம். 1.7.05க்குப் பின் கடன் குறையும். சுக்கிரனுக்கு நெய் தீபம் போட்டு வழிபடலாம்.

**● *என் வயதான காலத்தில் மகன் கள் இருவரும் வெளியூர் / வெளிநாட் டில் இருக்கிறார்கள். கடைசிக் காலத் தில் என் நிலை குழப்பத்தில் இருக் கிறது. என் எதிர்காலம், பிள்ளைகள் எதிர்காலம் பற்றிக் கூறவும்.***

**- ஆர்.எஸ்.எம். கோவை - 41**

குழந்தைகள் வெளியூர் / வெளிநாடு போயிருப்பதால் எந்தக் குறைவுமில்லை. மனக்குழப்பமே தேவையில்லை. புண் ணிய யாத்திரை போகலாம். சுப நிகழ்ச்சி சமீபத்தில் நடக்கும். ஆரோக்கியம் சீர் பட்டு விடும். பெருமாள் வழிபாடு செய் வது நல்லது. முன்னேற்றமும், நல்ல எதிர்காலமும் பிள்ளைகளுக்கு உண்டு.

*தேவை. குரு வழிபாடு முக்கியம். சுமாரான வாரம்.*

***மீனம் :** தலைக்கு வருவது தலைப் பாகையோடு போகும். குழப்பம் இல்லா மல் இருப்பது நல்லது. கணவர் மனைவி விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. அதிகம் பேச வேண்டாம். பொருளாதாரத் தில் தேக்க நிலை இருக்கும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் புதிய முயற்சிகள் வேண்டாம். தாய் தந்தையரின் உடல்நிலையில் கவனம் தேவை. நண்பர் களால் நன்மை இல்லை. கலைஞர்களுக்கு நல்ல காலம். சனீஸ்வர வழிபாடு நலம்.*

# "பறந்தாலும் விடமாட்டேன்!"



ராமதாஸுக்கு நன்றி சொல்லத்தான் வேண்டும். தெரிந்தோ தெரியாமலோ சமீபகாலமாக தமிழ் சினிமாவில் நல்ல தமிழ்த் தலைப்புகள் தோன்றியுள்ளன. 'கள்வனின் காதலி', 'கற்க கசடற', 'வேட்டையாடு விளையாடு'... வரிசையில் குருநாதர் கே.பி. தயாரிப்பில் சரண் இயக்கும் 'இதயத் திருடன்'.

காதல் ப்ளஸ் காமெடிப் படமாம் இது. மீண்டும் கிரேஸி மோகனுடன் கைகோத்திருக்கிறார் சரண். திருடனாக ரவி. பறிகொடுத்தவராக புதுமுகம் காம்னா. புகைப் படத்தில்தான் இருவரும் அருகருகே. படம் முழுக்க எதிரெதிர் துருவங்களாக இருப்பார்களாம்.

காம்னா பற்றி ஒரு நியூஸ் : இந்த மும்பை விளம்பரக் கிளி ராம்ஜெத் மலானிக்கு பேத்தி முறையாமே!

-செ.

# விடுமுறை ஸ்பெஷல்

மே 2005



## சிறுகதைப் போட்டி

காந்தலக்ஷ்மி சந்திரமௌலி எழுதும்

# மர்மப் புத்தகம்!

- விறுவிறுப்பான புதிய தொடர்கதை ஆரம்பம்

# கோகுலம்

ரூ. 6/- மட்டுமே

சிறுவர் மாத இதழ்



மனசு சுத்தமாவதற்காக, பழைய பாப கர்மப் பலனைத் தாங்கிக் கொள்வதற்காக, புதிய பாபம் செய்யாமலிருப்பதற்காக, எல்லோரும் முடிந்த மட்டும் தியானம் செய்ய வேண்டும். உறுதியான சங்கற்பம் இருந்தால் காலம் கிடைக்காமல் போகாது. அநாவசிய வம்பிலும், நியூஸ் பேப்பர் விமரிசனத்திலும் செலவாகிற காலத்தை மட்டுப்படுத்தினால், நித்திய சிரேயஸைத் தருகிற தியானத்துக்கு வேண்டிய அவகாசம் நிச்சயம் கிடைக்கும். தியானம் செய்வதே வாழ்க்கையின் முதலான காரியம் என்று கருத வேண்டும். ஐசுவரியம் இருந்தாலும், தாரித்திரியம் வந்தாலும், கஷ்டம் வந்தாலும், சுகம் ஏற்பட்டாலும், ஆரோக்கியம் இருந்தாலும், வியாதி வந்தாலும் - எப்போதும் எத்தனை நாழிகை முடியுமோ அவ்வளவுக்கு தியானம் செய்ய வேண்டும். நாம் செய்வதோடு நம் பழக்கத்துக்கு உட்பட்டவர்களையும் தியானம் செய்யும்படி சொல்ல வேண்டும். செய்யவில்லை என்று கோபித்துக் கொள்ளக்கூடாது. அன்போடு அவர்களுக்குப் படும்படி சொல்ல வேண்டும். அன்போடு சொன்னால் எப்படிப்பட்ட மனமும் கரையும்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# அருள்வாக்கு

**க**ங்கூலியின் சொதப்பல் ஃபார்மை எதிரொலித்து இளைஞர்களிடையே உலவும் எஸ்.எம்.எஸ்.கள் -

**க**ங்கூலி பேட்டிங் செய்யச் செல்கிறார். அப்பொழுது போன் ஒலிக்கிறது.

"ஹலோ, நான் கங்கூலிகிட்ட பேசணும்."

"ஸாரி. அவர் பேட்டிங் பண்ண போயிருக்காரு."

"ஓ.கே. அப்போ நான் லைன்லே வெயிட் பண்றேன்!"

# பத்துக்குள்ள நம்பர் ஒண்ணு சொல்லு!

**அ**னைத்து இண்டர்நேஷனல் டீம்களுக்கும் ஓர் நற்செய்தி. இந்திய அணியின் முதலிரண்டு விக்கெட்களை ஒரே ஓவரில் நீங்கள் வீழ்த்தி விட்டால், இலவசமாக கங்கூலியின் விக்கெட் அவர் ரிடையராகும் வரை பரிசாக அளிக்கப்படும்.

- இப்படிக்கு கோபக்கார ரசிகன்

**க**ங்கூலி ரஜினி ஸ்டைலில் பேசினால் :

"கண்ணா, எப்ப வருவேன், எப்படி வருவேன்னு கரெக்டா சொல்ல முடியாது. ஆனா, வந்தா அடுத்த நிமிஷமே போயிடுவேன். ஜுஜுபி!"

**இ**ந்திய அணியில் இருந்து கொண்டு கங்கூலி செய்யும் உருப்படியான காரியங்கள் இரண்டு :

- எல்லோரிடமும் நன்றாக கை குலுக்குகிறார்
- நன்றாக டாஸ் சுண்டுகிறார்.

**2** மினிட்ஸ் மேகி நூடுல்ஸ் செய்வது எப்படி?

கங்கூலி பேட் செய்ய கிளம்பும் பொழுது, கொதிக்கும் நீரில் நூடுல்ஸைப் போடவும். நன்றாக கிளறிக் கொள்ளவும். டீ.வி.யை பார்த்துக் கொண்டேயிருங்கள். என்ன, கங்கூலி அவுட்டா? ஹே, 2 மினிட்ஸ் நூடுல்ஸ் ரெடியாயிடுச்சு. அவ்வளவுதான்.

**ஒ**ரு குறும்பு ரசிகரின் கமெண்ட்: ஜான் ரைட் ரிடையர் ஆனதைத் தொடர்ந்து, இந்திய அணிக்கு ஒரு புதிய கோச் தேவை. அதற்கு ஏன் கங்கூலியையே கோச்சாக நியமிக்கக் கூடாது. அவருக்குப் பிடித்த பெவிலியனில் நாள் முழுவதும் சும்மனாச்சுக்கும் லேப்-டாப்பை தட்டிக் கொண்டு இளைப்பாறலாமே? என்ன நான் சொல்றது?

**க**ங்கூலி பேட் செய்யச் செல்கிறார். அப்பொழுது அவரது மனைவியிடம் என்ன பாட்டு கேட்பார்? 'பத்துக்குள்ள நம்பர் ஒண்ணு சொல்லு!'

- பப்பி



# உள்ளம் துறந்தவன்




**ஹா**லில் அனைவரும் மௌனமாக நாகரத்தினத்தை ஒத்திகை செய்து வைத்தது போலப் பார்த்துக் கொண்டிருக்க, மஞ்சரி "என்ன நல்ல சேதி மாமா, அண்யாவுக்கு குணமா யிருச்சா?" என்றாள்.

"அந்தப் பையனை நீ விரும்பறதா கேள்விப்பட்டோம். விஜிகூட சொன்னான். பேரு என்ன சபேசனா?"

"அழகேசன்"

"ஆ... அழகேசன். சலூன் வச்சிருக்கானா?"

"இல்லை" என்றாள் கோபத்தை அடக்கிக் கொண்டு.

"இல்லை. என்ன வேலைல இருக்கான்னு தெரிஞ்சுக்கலாமே."

"உங்களுக்குத்தான் அவன் சரித்திரமே தெரியுமே, ஃபைலே வச்சிருக்கிங்களே."

மரகதம், "அவன் என்ன வேலைல இருந்தா என்ன மாப்பிளை? புளியங் கொம்பா புடிச்சுட்டான். எங்கிட்ட ஒரு வார்த்தை சொன்னியா மஞ்சு? சின்ன மாப்பிளைய நிச்சயதார்த்தத்துக்கு வரச் சொல்லிட்டு, எங்களையெல்லாம அவமானப்படுத்திட்டியே"

"அம்...மா, நானா வரச் சொன்னேன்? எப்பவாவது சரவணனைக் கட்டிக்கிறேன்னு சொல்லிருக்கேனா?"

"ஏன், சரவணனுக்கு என்னவாம் குறை?"

"இப்பல்லாம் இத்தனை கிட்ட, உறவில கல்யாணம் கட்டிக்கறது நல்லதில்லைன்னு டாக்டர்ங்களே சொல்லிருக்காங்கம்மா. பாலா மாமா, சொல்லுங்க"



"மஞ்சு, என்னைப் போய் விரோதியா நெனைச்சிட்டியேன்னுதான் ஆதங்கமா இருக்குது. அவருக்கும் உடம்பு சரியில்லாம, நீயும் படுத்தினா நான் என்ன செய்வேன்?"

"அவனுக்கு ஏதாவது அட்ரஸ்னு உண்டா? இல்லை ஃப்ளாட்பாரம்தானா?"

"நீங்கள்லாம் இந்த மாதிரி நக்கலா பேசறது எனக்குப் பிடிக்கவே இல்ல."

நாகரத்தினம் குறுக்கிட்டார். "பாரு, அவனை நீ கல்யாணம் கட்டிக்கிறதில எங்களால வில்லங்கம் இல்லை. உன் இஷ்டம். நீ மேஜரான பொண்ணு. உன்னைக் கட்டாயப்படுத்த முடியாது. செஞ்சுக்க... ஆனா, உன் பேர்ல கம்பெனி ஷேர்கள் நெறையவே இருக்கு. நீ குடும்பத்தை விட்டு வெளிய போய், வேற எடத்தில கல்யாணம் கட்டிக்கணுங்கறே. சந்தோசமா கல்யாணம் செய்து கொடுக்கறோம். அந்தப் பையனுக்கும் தேவைப் பட்டா, ஒரு நல்ல வேலை போட்டுக் கொடுக்கறோம்."

பனீர் இளமைத் தொடர்

"மாமா, அதுக்கு நான் என்ன செய்யணும்? எங்கிட்ட எந்தக் காயிதமும் கிடையாது."

"எல்லாம் டிமாட்ல இருக்கு. ஒரு ஆத்தரைசேஷன் லெட்டர்ல, உன் ஷேர்களையெல்லாம் எங்க பேருக்கு மாத்திக் கொடுத்துர



ணும். ஒரு கையெழுத்துப் போட்டா போதும்."

"போட்டா?"

"சொன்னனே. அதுக்கு ஈடா கல்யாணம். பிரமாதமா செய்து கொடுப்போம். நிறைய நகைங்க, வெள்ளிப்பாத்திரம், பட்டுப் புடைவை, சீர் வரிசை. உங்க பேர்ல திருவான்மியூர்ல ஃப்ளாட்டு, ஆளுக்கு ஒரு காரு. என்ன சொல்றே?" என்றார் நாகரத்தினம்.

மஞ்சரி தன் சுற்றத்தின் முகங்களைக் கவனமாக ஒவ்வொன்றாகப் பார்க்க,

"விஜி, இஸ் திஸ் ட்ரு?" என்றாள்.

விஜி தோளைக் குலுக்கினான். "ஐ டோன்ட் கேர். இட்ஸ் யுர் லைஃப். உன் தீர்மானம்."

"நீ என்ன சொல்றே சரு?"

சரவணன் "நானும் யோசிச்சிப் பார்த்தேன். விருப்பமில்லாம கட்டிக்கிறது அர்த்தமில்லைங்கோ. நானே தயக்கமாத்தான் சொன்னேன். எனக்கு ஒரு படத்தில வேற நடிச்சாவணும்."

"ஏய் சரு, என்ன சொல்றே? யார் புரொட்யூசர்?" என்றாள் விஜி.

"அப்பாதான். வேற யாரு? பம்பாய்லருந்து லாரா தத்தாகிட்ட பேசிக்கிட்டிருக்காங்க. இல்லை பிபாசா. எழில் இரதன்னு புது இளம் இயக்குனரு."

"நீங்க என்ன சொல்றீங்க மாமா?" என்றாள் பாலாவை நோக்கி.

"லுக் மஞ்சரி, அந்தப் பையனைச் சந்திக்காம நான் ஏதும் சொல்றதுக்கில்லை. ஆனா இப்ப முக்கியம் சேர்மனுடைய இதயம்."

"அண்யாவுக்கு இதெல்லாம் தெரியாதில்லை?"

"தெரியாது."

"அவர்கிட்ட சொல்லாம எப்படி நான் கல்யாணம் செய்துக்க முடியும்? இம்பாசிபிள்."

"அவர் உடல்நிலையில இதை நாசுக்கா தெரிவிக்கணும். அதை பாலா பாத்துப்பார். அதுக்கு முன்னாடி இந்த ஷேர் மேட்டரைத் தீர்மானிக்கணும்."

"எங்கிட்ட எவ்வளவு ஷேர் இருக்குதுன்னே எனக்குத் தெரியாது மாமா."

"எனக்குத் தெரியும். முப்பது பர்சென்ட்."

"அது ஜாஸ்தியா?"

"ஒரு தனி ஆளுக்கு ரொம்ப ஜாஸ்திதான். பத்து பர்செண்ட் இருந்தாலே நீ ஒரு இ.ஜி.எம். கூப்பிட்டுப் போர்டைக் கலைச்சு, உனக்குத் தெரிஞ்ச ஆளுங்களை நியமிக்க முடியும். எல்லா டைரக்டர்களையும் பதவி நீக்கம் செய்ய முடியும். அந்த அளவுக்கு உன் ஒருத்திகிட்ட ஷேர்கள் இருக்கு. குடும்பத்தில் மத்தப் பேர் யாருக்கும் ஏனோ அத்தனை கொடுக்கலை சேர்மன்."

"எனக்கு நீங்க சொல்றது எதுவுமே புரியலை."

"இது புரியுதில்லையா? ஷேரை மாத்திக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தா, உன் கல்யாணத்துக்கு சம்மதம்ங்கறது..."

"அது புரியுது. எதுக்கும் நான் அழகியை ஒரு வார்த்தை கேட்டுர்றேன். இல்லை, அண்யாவையே கேட்டுர்றேன்."

"வேண்டாம்...வேண்டாம்" என்றார்கள் அவசரமாக.

"அவன் கையெழுத்து போடாதேன்னு சொன்னா என்ன அர்த்தம் தெரியுமா?"

"என்ன?"

"உன் ஷேருக்காகத் தான் அவன் உன் பின்னால அலையறான்னு"

"சேச்சே, அப்படியில்லை."

அப்போது போர்ட்டிகோவில் மௌனமாக பி.எம்.டபிள்யு கார் வந்து நிற்க, ராகவேந்தர் மெல்ல இறங்கி, டிரைவர் பிடித்துக் கொள்ள முற்பட, அவனை "விடுறா. எனக்கு ஏதும் இல்லை" என்று உதவியை ஒதுக்கி, தடுமாறி வெளியே

"ஒரு மாசத்துக்கு பீச்சுல செலவழிக்கறதுக்குண்டான காசை முதல்லயே என் காதலி வாங்கிடறா!"

"ப்ரீ பெய்டு காதல்னு சொல்லு!"

- அம்பை தேவா

வந்தார். சற்று ஆசுவாசப் படுத்திக் கொண்டார். மேல்மூச்சு வாங்கியது. வாசலில் இருந்த ஊஞ்சலில் உட்கார்ந்து ஒரு மாத்திரையை நாக்கின் கீழ் அடக்கிக் கொண்டார். பாலா அருகே சென்று அவரை அணைத்துக் கொண்டு, அழைத்து வந்து திவானில் உட்கார வைத்தார்.

"மாப்ளை, எதாவது செய்தே ஆகணும். பத்து வார்த்தை பேசறதுக்குள்ள தாடைல வலி. தோள்பட்டை வலி நேத்தைவிட இன்னைக்கு அதிகமாயிருச்சு. என்ன... எல்லாரும் மந்த்ராலோசனை பண்ணிகிட்டிருக்கீங்க? கிழவன் போயிட்டா எப்படி சொத்தைப் பிரிச்சிக்கறதுன்னா?"

மரகதம் "அப்படியெல்லாம் பேசாதீங்க. யாரும் சாவப் போறதில்லை."

"மஞ்சு, கிட்டவா. அண்யாவுக்கு மார்ல தடவிக் கொடு."

"என்ன பண்ணுது உங்களுக்கு அண்யா?" என்று தடவிக் கொடுத்தாள்.

அவளைத் தன் பால் இழுத்து அணைத்துக் கொண்டு, நெற்றியில் முத்தம் கொடுத்தபோது, அத்தனை பேரும் சங்கடமாகப் பார்த்துக் கொண்டார்கள். "நீ தொட்ட உடனே சரியாய்டுச்சு."

"பாலா, ரிப்போர் பண்ணிருவில்ல" என்றார் பரிதாபமாக.

"அதுக்காகத்தான் அமெரிக்காவிலிருந்து வந்திருக்கேன்."

இரண்டு வார்த்தை பேசுவதற்குள் அவருக்கு வியர்த்து ஊற்றியது. ஏசியை பெரிது பண்ணச் சொன்னார்.

"மாமா, நீங்க ஆபீஸ்ல ரொம்ப உணர்ச்சிவசப் பட்டிருக்கீங்க. அதனாலதான் இந்த இரைப்பும் களைப்பும்."

"என்ன செய்யணும் சொல்? என்ன சிகிச்சை?"

"ஆபரேஷன் பண்ணணும்னுதான் அபிப்ராயப்படறோம் மாமா."

"ஆபரேஷன் பண்ணித்தான் ஆவணுமா மாப்பிள்ளை? இதுக்கு ஓமியோபதில நல்ல நிவாரணம் இருக்குங்கறாங்க."

"முட்டாத்தனமா பேசாதீங்க. எப்பவுமே இந்த நாகரத்தினம் இப்படித்தான். பங்களாதேஷுக்கு இட்லி அரைக்கிற கிரைண்டர் அனுப்பறானாம். இப்பகூட சிரிப்பு வருது."

"பைபாஸ்ங்கறாங்களே, அதுவா மாமா?" என்றாள் மஞ்சரி.

பாலா "இவர் இதயம் இருக்கற நிலையில பைபாஸ் கூட வேலைக்காவாது."

"பின்னே?"

"ட்ரான்ஸ்ப்ளாண்ட். மாற்று இதயம் வச்சாகணும்."

"என்ன எளவோ பண்ணித் தொலச்சுருங்க. பத்தடி நடக்க முடியல."

பாலாவின் முகம் மலர்ந்தது. "இப்பதான் உங்களுக்குத் தெளிவு வந்திருக்கு. காலையே மினர்வா போயிடலாம்."

"எப்ப பண்ணுவீங்க? அஷ்டமியில வேண்டாம். எனக்கு இதில நம்பிக்கை இல்லை. பரமேஸ்வரன் சொன்னார். நல்ல ஆத்மா, இந்த பன்னாடைங்க மாதிரி என் பணத்துக்கு அலையற ஜன்மம் இல்லை."

நாகரத்தினம் "என்ன மாமா இப்படிப் பேச

"எம் பொண் டாட்டி ரவா கேசரி செஞ்சா நாலைஞ்சு தடவை கேட்டு வாங்கிச் சாப்பிடுவேன்."

"அவ்வளவு ருசியா இருக்குமா?"

"அதில்லைப்பா, அப்படி சாப்பிடாட்டி இன்னும் இரண்டு நாளைக்கு அதை நான்தான் சாப்பிட வேண்டிவரும்."

- ரேவதிப்ரியன்





# வன்முறை

ஓடக்கானை கல்லாலடித்தும்
தட்டாரப்பூச்சியை நூலில் கட்டியும்
சுவை கண்ட வன்முறை

பனையோலை ஓசையால
கழுதையை பதறியோட வைத்தும்
நாயின் வாலைக் குறுகத் தரித்தும்
குரூரமாய் வெளிப்படும்

காதல்கூட
ஆஸிட் மிரட்டலால்
யாசிக்கப்படுகிறது
இளைஞர்களால்

வன்முறை மீதான இச்சை
வளர வளர, உடன் வளரும்
மதமாய் இனமாய் மொழியாய்
வெடிக்கும்

வல்லரசுக் கழுகின்
வன்முறைப் பசிக்கு
வளைதகர்த்து சிதறும்
எலிகளாய்
வளரும் நாடுகள்

- சக்தி அருளானந்தம்

நீங்க?"

"தெரியுண்டா எனக்கு. பின்னால பார் கவாலை வெச்சுகிட்டு, எனக்கு உடம்பு சரியில்லைன்னு அவனை சேர்மன், எம்டி யாக்க ஒரு சதி நடக்குது. எல்லாம் தெரியும்டா."

நாகரத்தினம் மிகவும் அடிபட்ட பார்வையை வரவழைத்துக் கொண்டு "நீங்க என்ன சொல்றீங்களே..."

"சும்மார்றா. மாப்பிள்ளைக்கான மரியாதை தேவைன்னா, குழி பறிக்காம இரு. எல்லாம் எனக்குத் தெரியும்."

"மாமா, ஐயர் ஏதோ உங்ககிட்ட இல்லாததும் பொல்லாததும் சொல்லிருக்காரு."

பாலா "இதெல்லாம் ஆபரேஷன் பண்ணிகிட்டு அப்புறம் பேசிக்கலாம்."

"ஆபரேஷன் பண்ணிக்கிட்டு வந்து உங்க எல்லாரையும் ஒழிச்சுக் கட்டறேனா இல்லையா பாரு. வா கண்ணு, நீ ஒருத்தி தான் என் மேல நிசமா பாசம் வெச்சிருக்கே, நீயும் பாலாவும். பாலாவுக்கு என் பணம் தேவையில்லை, அதனால். பாலா, எப்ப ஆபரேஷன்?"

"உடனே பண்ணப் போறதில்லை. ஆஸ்பத்திரில அட்மிட் பண்ணிகிட்டு மற்ற டெஸ்ட் எல்லாம் எடுத்துட்டு ரிலாக்ஸா இருங்க. டோனர் கிடைக்கிறதுக்குக் காத்திருக்கணும். இந்தியாவில சராசரியா ரெண்டு மாதம் ஆகலாம்ங்கறாங்க. சிலவேளை..."

"பழையபடி ஆயிடுவேனா?"

"நிச்சயம்."

மஞ்சு, வா மாடிக்குப் போகலாம்."

"இனிமே மாடி கிடையாது. இங்கேயே கீழ பெரிய பெட்ரூம்ல."

மஞ்சரியைக் கைத்தாங்கலாகப் பிடித்துக் கொண்டு, படுக்கை அறைக்குச் சென்றார்.

"மஞ்சு, நீ என்ன சொல்றே? ஆபரேஷன் பண்ணிக்கலாம்ங்கறியா?"

"நிச்சயம் அண்யா."

"கூட இருக்கியா?"

"உங்களைவிட்டு அகலவே மாட்டேன்."

அவர்கள் அந்த அறைக்குள் சென்றதும், கல்யாணி "அம்மா, தெரியாமத் தான் கேக்கறேன், இது என்ன மாதிரி உறவு?" என்றாள்.

(தொடரும்)

# கிளம்புது கெட்டிமேளம்!

"என்னோட 'கெட்டி மேளத்'துல, லாஜிக் இல்லாம ஒரு ஸீன்கூட இருக்காது. பழி வாங்குற கதையை வைச்சு, ரசிகர்களை பழி வாங்க மாட்டேன். இதுல வர்ற கண்ணீர் வசனம், சென்டிமெண்ட் எல்லாமே யதார்த்தமா இருக்கும். காட்சிக்குக் காட்சி கோர்வையா இருக்கும். ஜெயா டீ.வி.யில ஏப்ரல் 25 முதல், இரவு 9 - 9.30க்கு கெட்டிமேளம் தன் ஒலியை ஒளிபரப்பாக்கப் போகுது. முதல் எபிசோட், கிளைமாக்ஸ்க்கு சமமா இருக்கும். அதை மிஸ் பண்ணிடாதீங்க!"

புதிதாகப் பேசுகிறார்: கெட்டிமேளத்தின் இயக்குனர் விக்ரமாதித்தன். இவர் 'மெட்டி ஒலி'யின் 2வது யூனிட் டைரக்டர்.

அற்ப விஷயங்களால் கல்யாணம் தள்ளிப் போகும் மூன்று சகோதரிகளின் வாழ்க்கை, இதோடு 1987ல் இந்தியாவை உலுக்கிய வணிகத்துறை சார்ந்த பிரச்னையும் இணைகிறதாம்.

- முகில்







பயணம்

ஸ்ரீ கே.என். ராஜன், வெளித் தோற்றத்தில் வெகுளியான 'பெரிய' மனிதராகத் தோன்றுகிறார். ஆனால் அவர் எங்களைப் படுத்தி வைத்த பாடு கொஞ்ச நஞ்சமல்ல. முதலில், வீட்டுக்குள் நுழைந்ததும், அவர், "உங்களுக்கு இங்கே ரொம்ப அசௌகரியமாய்த்தான் இருக்கும். பொறுத்துக் கொள்ள வேண்டியது. இந்த வீட்டில் யார் யாருக்கு எங்கே சௌகரியமோ, அங்கே இருந்து கொள்ளலாம்" என்று சொன்னார். உடனே அவரவர்களும் படுக்கையை எடுத்துக் கொண்டு அங்கங்கே போய் இடம் பிடித்துக் கொண்டார்கள். பிறகு ஒருவரையொருவர் பார்ப்பதே பிரம்மப் பிரயத்தனமாகி விட்டது. அவ்வளவு சின்ன வீடு! ஒரு மூலையிலிருந்து கூச்சல் போட்டால், இன்னொரு மூலையிலிருப்பவர்களுக்குக் கேட்காது.

இன்னும் அந்த மனுஷர் எங்களுக்குச் செய்த அசௌகரியங்களைச் சொல்லி முடியாது. அரிசிச் சாதம் வேண்டியவர்களுக்கு அரிசிச் சாதம்; கோதுமை ரொட்டி வேண்டியவர்களுக்கு கோதுமை ரொட்டி; பழமும் பாலும் வேண்டியவர்களுக்குப் பழமும் பாலும்; உபவாசம் விரும்பியவர்களுக்கு உபவாசம்; காரம் வேண்டியவர்களுக்குக் காரம்; காப்பி வேண்டியவர்களுக்குக் காப்பி, டீ, கோக்கோ, ஸோடா, உஷ்ணோதகம், சுத்த ஜலம், ஐஸ்வாட்டர் வேண்டியவர்களுக்கு அவரவர்கள் இஷ்டப்படி!

இவ்வளவுடன் நாங்கள் வந்த காரியத்துக்கான அசௌகரியங்களைச் செய்து கொடுக்கவும் அவர் பின் வாங்கவில்லை. அதாவது எல்லோராவுக்கு பஸ்; அஜந்தாவுக்கு டாக்ஸி; இரண்டு இடத்துக்கும் கட்டுச் சாதம்; அந்தந்த இடங்களைப் பற்றிய வர்ணனைகளும், விவரங்களும், சித்திரப் படங்களும் அடங்கிய புத்தகங்கள் முதலியன.



நான் யாத்திரையாகப் போகும் இடங்களில் எல்லாம் இம்மாதிரி அசௌகரியங்களைச் செய்து தரக்கூடிய ஒரு மனிதர் இருந்தால் போதுமென்று பகவானிடம் தெரிவித்துக் கொள்கிறேன்.

"அதோ எல்லோரா!" என்று பஸ் கண்டக்டர் சொன்னதும், அவர் காட்டிய திசையை நோக்கினோம். செங்குத்தான சுவர் மாதிரி ஒரு விசாலமான மலைப்பாதை நீள நெடுக நின்று கொண்டிருந்தது. அதில் அங்கங்கே பழைய காலத்துச் சாளர வாசல்கள் மாதிரி தென்பட்டன.

**"குகைகளை எவ்வளவு நேரத்தில் பார்க்கலாம்?"**

இந்தப் பாறைச் சுவரின் நீளம் வடக்கு தெற்காகச் சுமார் ஒன்றே கால் மைல் என்று தெரிந்து கொண்டோம்.

சாளர வாசல்கள் மாதிரி தென்பட்டவைதான்



யின் நடுமத்தியிலிருக்கும் கைலாஸ நாதர் குகைக் கோயிலுக்கு எதிரே உள்ள மரத்தடி. அந்தக் கோயில் வாசலில் ஒரு ஆசாமி சாவ காசமாக உட்கார்ந்திருந்தான். எங்களைப் போல் யாத்திரை வருபவர்களின் பிராணனை வாங்குவதற்கென்று ஏற்பட்ட வழிகாட்டி அவன்தான் என்று தெரிந்து கொண்டு, அவனிடம் "குகைகளைப் பார்க்க வேண்டும்!" என்றோம். "என்ன அவசரம்? உட்கார்ந்து சிரம பரிகாரம்



மலையில் குடைந்த குகைக் கோயில்களின் வாசல்கள் என்று தெரிந்தது. அம்மாதிரி வாசல்கள் எத்தனை என்று எண்ணிப் பார்த்தோம். கணக்கு ஒன்றும் சரியாக வரவில்லை. எனவே, ஸ்ரீ ராஜன் கொடுத்த புத்தகத்தைப் பார்த்து, மொத்தம் 33 குகைக் கோயில்கள் என்று

# அதோ எல்லோரா!

தெரிந்து கொண்டோம். இவற்றில் தெற்கு முனையிலிருந்து 12 குகைகள் புத்த மதக் குகைகள்; நடுவில் 17 ஹிந்து மதக் குகைகள்; வடக்கே 5 ஜைன மதக் குகைகள், மொத்தம் எவ்வளவு ஆகிறது? முப்பத்து நாலா? ஒன்று எப்படி அதிகம் ஆயிற்று? அடுத்த தடவை எல்லோராவுக்குப் போய்த்தான் தெரிந்து கொள்ள வேண்டும்!

**ப**ஸ் போய் நின்ற இடம், கிட்டத் தட்ட அந்தப் பாறை

செய்து கொள்ளுங்கள்" என்றான் அந்த ஆசாமி. "எங்களுக்குக் கொஞ்சம் அவசரந்தான். குகைகளை எவ்வளவு நேரத்தில் பார்க்கலாம்?" என்றோம்.

அந்த ஆசாமி வாயிலிருந்த பீடியைச் சாவ காசமாகக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு, "மூன்று மாதத்திற்குள் முப்பத்து மூன்று குகைகளையும் பார்த்து முடித்து விடலாம்" என்றான்.

- 'பயணக் கட்டுரைகள்'
- கல்கி களஞ்சியம், வானதி பதிப்பகம்



**அமரர் கல்கி**

...ஒரு கதை
ரெடி பண்றாங்க!

ஒருமுறை நான் என்.டி.ஆரைச் சந்தித்தபோது என்னுடன் படத் தயாரிப்பாளர் மணியனும் வந்திருந்தார். 'இதயம் பேசுகிறது' இதழின் ஆசிரியராக இருந்த மணியன், எம்.ஜி.ஆரை வைத்துப் படம் தயாரித்தவர் என்பது எல்லோருக்கும் தெரியும். அவர் எப்போதோ ஏதோவொரு நிகழ்ச்சியில் என்.டி.ஆரைப் பார்த்த போது, தமது படத்தில் நடிக்க வேண்டும் என்று பேச்சுவாக்கில் கேட்டிருப்பார் போலிருக்கிறது.

நாங்கள் பேசிக் கொண்டிருந்த சமயம் மணியன், என்.டி.ஆரிடம், "நீங்களெல்லாம் என் படத்தில் நடிக்க மாட்டீங்க போலிருக்கு'' என்றார். சட்டென உஷ்ணமான ராமராவ் "நீங்க எப்ப என்னைக் கேட்டீங்க?'' என்றார்.

"ஒரு நிகழ்ச்சியில் உங்களைப் பார்த்தபோது கேஷுவலாகக் கேட்டேன்" என்று பதில் சொன்னார் மணியன்.

"இதோ பாருங்க... ஏவி.எம்காரங்க எவ்வளவு பெரிய புரொட்யூஸர்ஸ்... அவங்க படத்தில் நான் நடிக்கணும்னா, இங்க வந்துதான் கேப்பாங்க. எல்லாத் தயாரிப்பாளர்களும் அப்படித்தான்... எங்கேயோ ஒரு நிகழ்ச்சியில பாத்துக் கேட்டா, அது முறையான அழைப்பா?" என்று பொரிந்து தள்ளிவிட்டார்.

கமல்ஹாஸனின் நூறாவது படம் 'ராஜபார்வை'. ஒரு சிறந்த கலைஞனுக்கு மரியாதை செய்யும் வகையில் அந்த விழா சிறப்பாக அமைய வேண்டும் என்று திட்டமிட்டோம். எங்களோடு மணியன்,

# "கமலைப் பாராட்டமாட்டேன்!"

## "அவரைப் போலவே நானும் ஸ்ரீதேவியுடன் டூயட் பாடி ஆடுகிறவன்"

ராது இன்னும் பல நண்பர்கள், பெரும் ஆர்வம் காட்டி முயற்சிகளை மேற்கொண்டார்கள். தென்னிந்திய மாநிலங்களின் முதல்வர்கள் அனைவரையும், அதேபோல முன்னணிக் கதாநாயகர்கள் அனைவரையும் அழைக்க விரும்பினோம். அப்போது தமிழக முதல்வராக இருந்த எம்.ஜி.ஆரைக் கேட்டபோது, நொடியும் தாமதிக்காமல் 'சரி' என்றார்.



என்.டி.ஆரைச் சந்திப்பதற்காக சென்னையில் அவரது வீட்டுக்குப் போயிருந்தோம். விஷயத்தைச் சொன்னோம். நான் சற்றும் சிந்தித்துப் பார்த்திராத ஒரு கோணத்தில் பதில் சொன்னார் ராமராவ்.

"எம்.ஜி.ஆர் நடிப்பிலிருந்து ஓய்வு பெற்று விட்டார். நான் அப்படியில்லை. இன்னும் ஒரு பர்ஃபாமிங் ஆர்ட்டிஸ்ட்டாகவே இருக்கிறேன். கமலைப் போலவே நானும் ஸ்ரீதேவியுடன் டூயட் பாடி ஆடுகிறவன். இரண்டு பேரும் சமமாக இருப்பவர்கள். அப்படியிருக்க நான் ஏன் அவரை மேடையில் புகழ்ந்து 'கமலைப் போல நடிகர் இல்லை' என்று சொல்லணும்? அப்படிச் சொன்னால் அது வெறும் வாய் வார்த்தையாக மட்டுமேதான் இருக்குமே தவிர, என் மனசாட்சியுடன் சொல்வதாக இருக்க முடியாது. ஸாரி" என்று சொல்லிவிட்டார்.

அப்படிப்பட்ட வெளிப்படையான கலைஞரை நான் சந்தித்ததில்லை.

### மெஹர்பான்

'படிக்காத மேதை'யின் ஹிந்தி வடிவம்தான் மெஹர்பான். இந்தப் படத்தில் சுனில் தத், அசோக் குமார் நடித்தார்கள். இதில் நடிக்க கலைஞர்களைத் தேர்வு செய்தபோது 'சுனில் தத்தைப் போடலாம்' என்று யோசனை சொன்னார் எங்கள் கல்கத்தா பங்குதாரர் வி.ஏ.பி. ஐயர். இதில் வேடிக்கை என்னவென்றால், முன்பு நாங்கள் எடுத்த ஒரு ஹிந்திப் படத்தில் சுனில் தத்தைப் போட நாங்கள் முடிவு செய்தபோது "அந்த பாக்ஸ் ஆபீஸ் பாய்ஸனைப் போட வேண்டாம்" என்று அப்பச்சிக்குத் தந்தி அடித்தவர் இதே ஐயர்தான். அந்தத் தந்தியை அப்பச்சி தன் மேஜை டிராயரில் பத்திரமாக வைத்திருந்தார். இப்போது

களில் தந்தைப் போடலாம் என்று ஐயர் சொன்னதும், அந்தத் தந்தியை எடுத்து அவர் முன் போட்டு, "அதையும் நீங்கதான் சொன்னீங்க... இதையும் நீங்கதான் சொல்றீங்க" என்று ஐயரை அப்பச்சி கிண்டலடித்தார்.

"அன்னிக்கு அது கரெக்ட். இன்னிக்கு இது கரெக்ட்" என்று ஐயர் சமாளித்தார்.

மெஹர்பான் தயாரிப்பின் போது அசோக் குமாருக்கு பைபாஸ் ஆபரேஷன் செய்ய வேண்டி வந்தது. பாஸ்டன் நகரில் ஆபரேஷன் என்று முடிவானபோது, அவருக்கானச் சம்பளத் தொகையை முன் கூட்டியே கொடுத்தோம். "நான் நிச்சயம் திரும்பி வருவேன் என்ற நம்பிக்கையில் செட்டியார் பணம் தந்திருக்கிறார்" என்று அசோக்குமார் நெகிழ்ந்து போய் குறிப்பிட்டார்.

அந்தப் படத்துக்காக ரொம்பவும் செலவு செய்து, பிரமாதமாக செட் போட்டிருந்தோம். பீம்சிங் டைரக்ஷனில் படம் வளர்ந்து வந்தது.

ஒருநாள் திரிலோக் சந்தர் என்னைப் பார்க்க வந்திருந்தார். "மெஹர்பான் செட்டைப் பாத்துட்டு வரலாம், வாங்க" என்று அன்று நான் அவரை அழைத்துப் போனேன். வெளியே அப்பச்சி நின்றிருந்தார். "எங்கே போறீங்க?"

"மெஹர்பான் செட்டை திரிலோக்குக்குக் காட்ட அழைத்துப் போறேன்."

"சரி... போய்ப் பாத்துட்டு திரிலோக் சந்தரை என் ரூமுக்கு அழைத்து வாப்பா" என்றார் அப்பச்சி.

எதற்காக என்று எனக்குப் புரியவில்லை. நாங்கள் 'செட்டை'ச் சுற்றிப் பார்த்துவிட்டு, அவரது அறைக்குப் போனோம்.

"செட்டை ரொம்பப் பெரிசா போட்டிருக்கோம். ஆனா எடுத்த வரைக்கும் போட்டுப் பார்த்ததில், படத்தில செட்டோட ரிச்னஸ் சரியா வரல" என்றார் அப்பச்சி.

"எப்படி வரும்?" என்று கேட்டார் திரிலோக். "நீங்க எடுக்கறது படிக்காத மேதை. எமோஷனல் ஸ்டோரி. அதில் சின்னக்கல்ல எமோஷனைக் காட்டணுமே தவிர, காட்ட முடியுமே தவிர, அங்கே போய் 'செட்'டோட ரிச்னஸை எப்படிக் காட்ட முடியும்? பீம்சிங் எப்படிக் காட்டுவார்?"

"நெறய செலவு பண்ணி 'செட்' போட்டாச்சு. என்ன பண்றதுன்னே தெரியல" என்றார் அப்பச்சி.

ஸ்டுடியோவில் செட் போட்டு அங்கே

* 'மெஹர்பான்' - அசோக்குமார்



* 'அதே கண்கள்' - காஞ்சனா, ரவிச்சந்திரன்



ஷூட்டிங் முடிந்த பின்பு, அந்த செட்டைப் பிரித்து விடுவதுதான் எங்கள் வழக்கம். அதே செட்டை பிறகு யாருக்கும் வாடகைக்கு விடுவதில்லை. மெஹர்பான் செட்டைப் பொறுத்தவரை, அதன் 'ரிச்னஸ்'ஸை படத்தில் காட்ட முடியவில்லையே என்ற ஆதங்கம் அப்பச்சிக்கு இருந்தது.

"சரி... இந்தப் படம் முடிஞ்ச பிறகு இந்த செட்டைப் பிரிக்க வேணாம்" என்றார் ''இந்த செட்டுக்குப் பொருந்தி வராப்போல ஒரு கதை ரெடி பண்ணுங்க"

"பொருந்தி வராப்போலன்னா, இதுக்கு சோஷியல் சப்ஜெக்ட்ஸ் சரிப்பட்டு வராது. க்ரைம் த்ரில்லர் தான் பொருந்தி வரும். செட்டுக்கு ஸ்கோப் இருக்கும்" என்றார் திருலோக்.

பூட்பங்களா, பீஸ் ஸால் பாத், கும்நாம், டார்க் பங்களா போன்ற நாங்கள் பார்த்திருந்த படங்களையெல்லாம் மிக்ஸ் பண்ணி, ஒரு க்ரைம் த்ரில்லர் கதையை தயார் செய்தோம். அதுதான் 'அதே கண்கள்!'

டி.என். பாலுவை வைத்து காமெடி ட்ராக்கை மட்டும் தனியாக எழுதினோம். டி.ஆர். ராமண்ணாவிடம் இருந்தவர் பாலு. 'நான்', 'குமரிப்பெண்' போன்ற படங்களில் பிரபலமான காமெடி ட்ராக்கை எழுதியவர்.

ஒரே வாரத்தில் முழு ஸ்கிரிப்டையும் தயார் செய்து விட்டோம்.

இந்தப் படத்துக்கு வேதா இசையமைத்தார். இலங்கை வானொலியில் புகழ் பெற்ற மயில்வாகனன்தான், இந்த வேதாவை என் சகோதரர் குமரனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார்.

"இவருக்கு இசையமைக்க வாய்ப்புத் தாருங்கள். பாடல்களை இலங்கை வானொலி மூலம் 'ஹிட்'டாக்கிக் காட்டுவது என் பொறுப்பு' என்று மயில்வாகனன் உறுதியும் தந்திருந்தார்.

'அதே கண்கள்' படத்தின் பாடல்கள் உண்மையிலேயே மிகவும் இனிமையாக வந்திருந்தன.

இதில் வேடிக்கை என்னவென்றால், எந்தப் பாடல்களை வானொலி மூலம் ஹிட்டாக்கிக் காட்டுகிறேன் என்று மயில்வாகனன் உறுதி தந்திருந்தாரோ, அந்தப் பாடல்கள் வெளியானபோது அவர் இலங்கை வானொலியில் பணியில் இல்லை. இருந்தாலும் பாடல்கள் யாவும் இனிமை காரணமாக தாமாகவே பிரபலமாயின.

'அதே கண்கள்' படத்தின் ஹீரோ ரவிச்சந்திரன். படம் நூறு நாட்கள் ஓடியது.

பொதுவாக க்ரைம் த்ரில்லர் கதைகளைக் கொண்ட படங்களுக்கு ரிப்பீட்டெட் ஆடியன்ஸ் இருப்பதில்லை. படத்தை ஒரு தரம் பார்ப்பதோடு சரி. ஆனால் 'அதே கண்கள்' படத்தை ஒருமுறை பார்த்தவர்கள், திரும்பவும் வந்து பார்த்தது எங்களுக்கே வியப்பாக இருந்தது.

தமிழில் வெற்றி கண்டதும், அதே படத்தை கிருஷ்ணாவை வைத்து தெலுங்கிலும் தயாரித்தோம். தமிழில் அந்தப் படம் 'தொழில் நுட்ப அம்சங்களுக்காக திரைப்படக் கல்லூரி மாணவர்களுக்கு 'மாதிரிப் படம்' என்று பரிந்துரைக்கப் பட்டது.

''அதே கண்கள்' தான் எனக்கு இன்ஸ்பிரேஷன் ஸார்" என்று திரிலோக்சந்தரிடம் இன்றும்கூட சில திரைப்படக் கல்லூரி மாணவர்கள் சொல்வதுண்டு. (தொடரும்)



"இந்த வருடத்தின் கனவுக்கன்னி கனவுக்கண்ணன் யார் என்பதை காலேஜ், காலேஜாக சென்று சர்வே செய்ய வேண்டும்... ஆனால் அதற்கு யாரை அனுப்புவது என்றுதான் தெரியவில்லை..." என்று முகத்தை அப்பாவியாக மாற்றிக் கொண்டு ஆசிரியர் நம்மை வெறுப்பேற்ற, "இந்த விஷயத்திலெல்லாம் தாமதம் கூடாது" என்று மனசாட்சியின் உத்தரவுக்கு அடிபணிந்து அசைன்மெண்டைக் கொத்திக் கொண்டு, டாப் கியரில் புறப்பட்டது நம் வாகனம்.

நம்மைவிட நம்



# இவங்க தா

# டா





வண்டி ரொம்ப ஷார்ப்பாக இருக்கிறது. வழியில் எம்.ஓ.பி வைஷ்ணவா வந்தாலும் நின்று விடுகிறது. எத்திராஜ் வந்தாலும் நின்று விடுகிறது. சரி... என்று நம் வண்டி நின்ற இடத்திலெல்லாம் இருக்கும் காலேஜுக்கெல்லாம் சென்று நமது சர்வேயை (கனவுக் கண்ணன்) துவக்கினோம்.

விஷயத்தைச் சொன்னதும், ஆ
'கனவுக் கண்ணனாக' பாவித்
கவனமாகக் குறிப்பெடுத்துக்
"இன்னிக்கு மட்டும் இல்
மேடி படம் வந்தா மட்டும்
சிரிக்கிறார் எம்.ஓ.பி.யின் அ

"ஹாயோ! எங்க மே
ஹையர் தேன் தி ·ஸ்கை"
(பேரு தாஹாவாக்... நல்ல

'
சப்பே
கலாக
ஹைட்
விட்டி...

ருக்கு தங்களுடைய கனவுக் கண்ணனை ஒட்டு மொத்த தங்களது உள்ளக் கிடக்கையை எடுத்துவிட, நாமும் ரண்டோம்.

என்னிக்குமே எங்க ட்ரீம் பாய் சூர்யாதான். ஆனா ஞ்சநான் சூர்யாவுக்கு டெம்பராக பேக்கப்'' என்றபடி திகா.... (ஆஹா... இந்த மேட்டர் நல்லாயிருக்கே!)

யாருக்குமே சப்ஸ்டிடியூட் இல்ல.... மேடி ஈஸ் ிது மீனாட்சி காலேஜ் தாஹாவின் பாயின்ட்... ளை... ஸ்வா... ஹான்னு வைக்கல...!)

யம்' ரவிக்கு எத்திராஜில் ட் கொஞ்சம் தூக் இருந்தது... ''என்ன .என்ன பார்சனா எஸ் சம்திங் கிரேட்பா...







ப்!

என்னிக்குமே என் செல்லம்... ரவிகுட்டிதான்'' என்று எஸ்.ஐ.ஈ.டியின் மஞ்சு தன்னைச் சுற்றியுள்ளவர்களை மறந்து ஓவராக உருக, ''ஓ... ஹோ'' என்று எல்லாரும் சவுண்ட் கொடுத்த பிறகுதான் நிறுத்தினார்.

"சும்மா கில்லி மாதிரி சொல்லி சொல்லி ஜெயிக்கற விஜய்தான் என்னிக்குமே டாப்... மத்தவங்க எல்லாம் டூப்" என்று பஞ்ச் விட்டது குயின் மேரீஸ் குயில் (பெயரே குயில் தானாம்!)

இறுதியாக எல்லாவற்றையும் கலந்து, ஆராய்ந்து பார்த்த பிறகு வந்த இறுதி லிஸ்டில், 32% வாக்குகளைப் பெற்று சூர்யா முதலிடத்தையும், 28% பெற்ற விஜய் 2-வது இடத்தையும், 23% பெற்ற மாதவன் மூன்றாவது இடத்தையும், ஜெயம் ரவி, சிம்பு 19%, 8% பெற்று அடுத்தடுத்த இடங்களையும் பிடித்தனர்.

ஏனோ இந்தமுறை

தனுஷுக்கும் பெரிய அளவில் ஆதரவு கோஷம் இல்ல.. "நீங்க எவ்வளவு தான் சர்வே எடுத்தாலும் 'அந்நியன்' வர்ற வரைக்கும் தான் உங்க ரேட்டிங் செல்லுபடியாகும்... அதற்கப்புறம் சியான்தான் டாப்ல இருப்பார்" லேட்டாகச் சொன்னாலும் லேட்டஸ்டாகச் சொன்னது க்யூ.எம்.சியின் சியான் சிங் காங் 'ஜிங்கி'. (அப்படிப் போடு!)

அடுத்து நம் வண்டியை சிரமப்பட்டு சிரமப்பட்டு, ஒவ்வொரு ஆடவர் கல்லூரிக்கும் அழைத்துச் சென்றோம்... ஆனாலும் இவ்வளவு ஜொள்ளு, லொள்ளு ஆகாதுங்க! (நம்ம வண்டிக்குத்தான்!)

"நம்ம சாமி 'மாமி'க்கு ஈடு இணையே இல்லப்பா... எப்படி சியானுக்கும் மேட்ச் ஆகறாங்க... சிம்புக்கும் மேட்ச் ஆகறாங்க... ச்சோ ச்வீட், த்ரிஷாதான் நிஜ கனவுக் கன்னி" - இது லயோலாவின் ரகுநாத் (சொல்லிவிட்டு கர்ச்சீப்பால் வாயைத் துடைத்துக் கொள்கிறார்... ஏனாம்?)

"ஓவர் ஆக்டிங் பண்றாங்கன்னு சூர்யாவே சொன்னாலும், எங்களோட ட்ரீம் கேர்ள் 'ஜோ'தான்... அந்த 'டபக் டபக்' கண்ணே போதும்!" பச்சையப்பாவின் பாஸ்கர் எடுத்துவிட 'ஓ' சவுண்ட் காதைப் பிளக்கிறது.

'சந்திரமுகி'யில் சூப்பர் ஸ்டாருக்கு ஜோடி போட்டிருப்பதால், நயன்தாராவுக்கு கொஞ்சம் மாஸ் கூடுதலாகவே இருக்கிறது..."ரைட்... ஓகே.. ஆனா அப்பப்போ முகத்தை அஷ்ட கோணலாக்குறது தான் ஒரே மைனஸ்". சொன்னவர் அண்ணா யுனிவின் சரவணன் (ஆமா! சந்திரமுகியில சூப்பர் ஸ்டாரின் பெயர் கூட சரவணன் தானே!)



"இந்த சீரியல்ல வர்ற பெரியவரை எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கே?"
"முப்பது வருஷத்துக்கு முன்னாடி இதே சீரியல்ல ஹீரோவா நடிச்சவர்தான்!"
- குட்டி பிரசன்னா

"ஆயிரம் இருந்தாலும் மலபார்னா மலபார்தான்... என்ன ஒரு குறும்புத்தனமான முகம்... அழகான டான்ஸ் மூவ்மெண்ட்ஸ்... சான்ஸே இல்ல... இன்னும் மூணு வருஷத்துக்கு அஸின் ராஜ்யம்தான்" - இது ஐ.ஐ.டி டான் குணாவின் அருள்வாக்கு.

சினேகா, 'காதல்' சந்தியா என்று பலருக்கும் வாக்குகள் விழுந்தாலும், த்ரிஷாதான் டாப் என்று நமது ரேட்டிங் உத்தரவாதம் தருகிறது. 30% வாக்குகள் பெற்று த்ரிஷா முந்துகிறார். 25% பெற்று அஸின் 2-வது இடத்தையும், 20% பெற்று 'ஜோ' மூன்றாவது இடத்தையும் அலங்கரிக்கின்றனர். 17% பெற்று 'நயன்தாரா' நான்காம் இடத்தையும், 8% பெற்று காதல் சந்தியா ஐந்தாம் இடத்தையும் பெறுகின்றனர். ஒருவழியாக ஒரே நாள்ல எல்லா காலேஜுக்கும் சென்று 'தரிசனம்' பெற்ற மகிழ்ச்சியோடு புறப்பட்டால், எத்தனை முறை உதைத்தாலும் கிளம்பவில்லை வண்டி. செல்போனில் பேசிவிட்டு "என்னடா இது, நம்ம ஆபீசுக்கு த்ரிஷா வந்திருக்காங்களாம். கிளம்ப மாட்டேங்கறியே" என்றதும் உடனே கிளம்புகிறது.

நம்ப வண்டியாச்சே!

- முத்துக்குமார்



''தலைவரே! கட்சில எதிர்கோஷ்டிங்க தொல்லை ரொம்ப ஓவராப் போச்சு!''

''என்னப்பா சொல்ற?''

''உங்களுக்கு இருக்கிற 'சர்க்கரை வியாதி வெற்றியடைய வாழ்த்துகள்'னு எவனோ இன்னிக்கு போஸ்டர் ஒட்டியிருக்கான்!''

- அம்பை தேவா

# வெற்றியடைய வாழ்த்து!

''தலைவர் தன் கையே தனக்குதவின்னு இருக்கிறவரு.''

''வெரி குட்...''

''கூலிப் படையை எல்லாம் நம்ப மாட்டாரு...''

- எஸ்.மோகன், சங்கரன்கோவில்





''தலைவர் பண்ற காமெடிக்கு அளவே இல்லாமப் போச்சு!''

''என்ன செஞ்சார்?''

''யார் 234 சீட் ஒதுக்கறாங்களோ அவங்க கூடத்தான் கூட்டணியாம்!''

- கொங்கணாபுரம் வே.செந்தில்

''ஷூட்டிங் ஸ்பாட்டுல டைரக்டர் திடீர்னு ஹீரோயினை அலேக்கா தூக்கிட்டாராமே...?''

''ஹீரோயினைத் தூக்கினாத்தான் தொடர்ந்து நடிப்பேன்னு ஹீரோ சொன்னதை டைரக்டர் தப்பாப் புரிஞ்சுக்கிட்டாராம்!''

- சீர்காழி வி.ரேவதி



ரெமி சோமு

# அனுமதி இலவசம்

அனந்தராமன்,
டெல்லி

சின்னவன் நாணுவுக்கு,

பெரியண்ணா ஆசிர்வதித்து எழுதியது. உன் கடிதம் கிடைத்தது. மிக்க மகிழ்ச்சி. சென்னையே கதின்னு இராமல் கொல்கத்தாவுக்கு கிளை மேனேஜராக, கார், வீட்டு வசதிகளுடன் பதவி உயர்வு கிடைத்திருக்கிறது என்றால், உன் உழைப்புக்குக் கிடைத்த பரிசு.

நம் அப்பா நம் எல்லோரையும் வளர்த்த விதம் அப்படி. அதே சமயம் அப்பாவை நினைக்கும்போது வருத்தமாகத்தான் இருக்கிறது.

நீ கேட்டிருப்பதுபோல் இங்கு அப்பாவை என்னால் வைத்துக் கொள்ள இயலாது. டெல்லியின் குளிரும் கோடையும் உனக்குத் தெரிந்ததே.

அப்பாவுக்கு சென்னைதான் நல்லது என்பது என் அபிப்பிராயம் மட்டுமல்ல, உன் அண்ணியின் அபிப்பிராயமும் கூடத்தான்.

நம் அம்மா இருந்திருந்தால் இந்தப் பிரச்னையே இருந்திருக்காது.

இப்போது நிறைய வசதியான முதியோர் இல்லங்கள் வந்துவிட்டன. அப்பாவை நல்ல ஒரு முதியோர் இல்லத்தில் சேர்த்துவிடு. உனக்குப் பண உதவி தேவை என்றால் எழுது.

அல்லது டெலிபோனில் பேசு.

உன் அண்ணா,
அனந்தராமன்






விச்சு
மும்பை 20.3.05

தேவரீர் அண்ணாவுக்கு,

அநேக நமஸ்காரங்கள். வெகு நாட்கள் கழித்து தங்களுக்கு இக்கடிதத்தை எழுதி இருக்கின்றேன். அவ்வப்போது எழுத நினைப்பது உண்டு. மும்பை வாழ்க்கை தங்களுக்குத் தெரியாதது அல்ல. இங்கு நானும் சுதாவும் வேலைக்குப் போகிறோம். குழந்தைகளை கிரீச்சில்தான் விட்டுவிட்டுப் போகிறோம். இயந்திர வாழ்க்கை. ஏதோ ஓடிக் கொண்டிருக்கிறது.

சென்னையிலிருந்து நாணு எழுதியிருந்தான். அவனுக்கு மேனேஜர் பிரமோஷன் கிடைத்திருக்காம். உத்தியோகத்தில் மட்டுமல்ல, வாழ்க்கையிலும், பாவம் ரொம்பவும் கஷ்டப்பட்டிருக்கிறான். பாசமிக்கவன். அம்மாவும் அப்பாவும் அவன்மீது தனிப்பாசம் வைத்திருந்தார்கள். அம்மா போனப்புறம் அப்பாவையும் நல்லபடியாத்தான் பார்த்துக் கொள்கிறான். இப்போ அவனோட பிரச்னை பற்றி எழுதியிருந்தான். அப்பாவை என்ன செய்வது? மும்பையில் அப்பாவுக்கு வசதிப்படுமா என்று கேட்டிருந்தான். நீங்கள் எழுதியிருந்த கடிதத்தின் ஜெராக்ஸ் காப்பியை எனக்கு அனுப்பி இருந்தான். குடும்பத்துக்குப் பெரியவர் நீங்கள். மும்பை இரைச்சலில் என்னால் அப்பாவைப் பார்த்துக் கொள்ள முடியாது. பெரிய அண்ணா சொல்வதுபோல் செய் என்று பதில் போட்டுவிட்டேன்.



கடிதக் கதை!

தங்களின் ஆசிர்வாதம் என்றும் இருக்கட்டும்.

தம்பி விச்சு
மும்பை

பி.கு. : நானும் என் பங்குக்கு அப்பாவுக்கு ஏதாவது பணம் முடிந்தபோது அனுப்புகிறேன்.

''பையனுக்கு செல்லப்பான்னு பேர் வெச்சது தப்பாப் போச்சு.''
''ஏன்?''
''சதா செல்லும் கையுமா திரியறான்''
- மதுரை முருகேசன்



மைதிலி
பெங்களூர்
1.4.2005

தேவரீர் அப்பா அவர்களுக்கு,
சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து மைதிலி எழுதியது.

தம்பி நாணு லெட்டர் போட்டிருந்தான். அவனுக்கு நல்ல காலம் பொறந்துட்டது. இனிமே சந்தோஷமா இருக்கட்டும்.

அப்பா! நாணு தங்களைப் பத்தி எழுதியிருந்தான். எங்களோட நீங்க இருக்க முடியாதுப்பா. நிலைமை சரியில்லை.

இப்போதே கரிச்சுக் கொட்டிக்கிட்டு இருக்காங்க. நீங்க செஞ்ச சீர்வரிசை போறாதாம்.

டெல்லி அண்ணா எழுதியிருந்த யோசனையை நாணு எழுதிக் கேட்டிருந்தான்.

டெல்லி அண்ணா சொல்றபடி, நீங்கள் பேசாம முதியோர் இல்லத்துலேயே சேர்ந்திருங்க. நானும் உங்கள் மாப்பிள்ளையும் அப்பப்போ சென்னைக்கு வந்து உங்களை கவனிச்சுக்குறோம். உங்கள் மாப்பிள்ளை பிஸினஸ் ஆரம்பிக்கப் போறாராம். நீங்க செய்ய வேண்டிய பாக்கி சமாசாரங்களை செய்து விடவும்.

நீங்கள் அடிக்கடி சொல்வீங்களே, என் பார்வதியோட வாழ்ந்த இந்த வீட்லேதான் கடைசி மூச்சு வரை வாழ்வேன்னு. நீங்க எங்கே இருந்தாலும் மனசாலேயே அம்மாவோட வாழலாம். பேசாமல் வீட்டை வித்துட்டு கடன்களை அடைக்கவும்.

தங்கள் செல்லப்பெண்
மைதிலி

---

நாணு
கொல்கத்தா
5.4.2005

அன்புள்ள டெல்லி அண்ணாவுக்கு,
தமிழ் புத்தாண்டு வாழ்த்து 2005.

அண்ணா, நம்ம யோசனைகள் எதற்கும் அப்பா சம்மதிக்கவில்லை.

''போங்கடா, போங்க''ன்னு சிவாஜி ஸ்டைலில் பேச ஆரம்பிச்சுட்டார்.

நானும் தற்போது டூட்டியில் சேர்ந்துவிட்டேன். கொல்கத்தா பிடித்திருக்கிறது.

சென்னையை விட்டு வரும்போது அப்பாவுக்கு ஒரு நல்ல ஏற்பாடு பண்ணிவிட்டு வந்துள்ளேன். விஷயத்தைக் கொஞ்ச நாட்கள் ஆறப் போட்டா பின்னாலே பாத்துக்கலாம். இப்போ தற்காலிகமா என்ன ஏற்பாடுன்னா, நம் அம்மாவோட சிநேகிதி அம்மு மாமி, மைலாப்பூர்லே ஒரு முதியோர் இல்லத்துலே ரொம்ப சௌகரியமா இருக்காங்க. அந்த மாமி அப்பாவுக்கும் நல்ல சிநேகம். அம்மு மாமிகிட்டே எல்லா விஷயத்தையும் சொன்னேன்.

அதற்கு அம்மு மாமி, ''நீ கவலை

இல்லாம கொல்கத்தா போ. அப்பாவை எப்படி வழிக்குக் கொண்டு வரணுமோ நான் பாத்துக்குறேன்'' என்றார்.

அம்மு மாமியோட பேச்சு எனக்கு நல்லதாப் பட்டுது. வரும்போது மாமி கிட்டே ரெண்டாயிரம் ரூபாய் கொடுத்திட்டு வந்திருக்கேன்.

அம்மு மாமியும் உங்களுக்குக் கடிதம் போடறதாச் சொன்னா.

தம்பி
நாணு

ஒரு வாரம் கழித்து... நான்கு பிள்ளைகளுக்கும் அம்மு மாமி கடிதம் எழுதியிருந்தாள். கடிதத்தோட ஓர் அழைப்பிதழும் வந்திருந்தது. அதில் -

**பார்வதி முதியோர் இல்லம்**
**திறப்பு விழா அழைப்பிதழ்**

வரும் வைகாசி மாதம் 15ம் தேதி எங்கள் பார்வதி முதியோர் இல்லத் திறப்பு விழாவுக்கு, தாங்கள் தங்கள் குடும்பத்தாருடன் வந்து சிறப்பிக்க வேண்டுகிறேன்.

முதியோர் இல்லத் தலைவர்
சுந்தரம்

அழைப்பிதழின் அடியில் பிள்ளைகளின் ஒவ்வொரு பெயரிலும் "பிள்ளைகளா, எனக்கு வந்த பிரச்னை உங்களுக்கும் வர வேண்டாம். நம் வீட்டை யாருக்கும் விற்காமல், உங்கள் அம்மா பெயரில் முதியோர் இல்லம் திறந்து விட்டேன். எனக்கு அம்மு மாமியும் நிர்வாகத்தில் உதவி செய்வதாக சொல்லி இருக்கிறார்.

எங்கள் இல்லத்தில் குறைந்த கட்டணமே வசூல் செய்கிறோம்.

என் பிள்ளைகளாகிய நீங்கள் பார்வதி முதியோர் இல்லத்தைத் தேடி வந்தால் - உங்களது தள்ளாத காலத்தில் உங்களுக்கு மட்டும் அனுமதி இலவசம். உங்கள் சந்ததி எல்லாருக்குமே அனுமதி மட்டுமல்ல, எல்லாமே இலவசம்.

சுந்தரம்



மகாசிவ ராத்திரியில், குல தெய்வ வழிபாட்டுக்காக, விருது நகர் மாவட்டத்திலுள்ள தொட்டியன்குளம் கிராமத்துக்கு, முப்பது வருடங்களாகச் சென்று கொண்டிருந்த நான், அங்கு குடும்பத்துடன் தங்கி உழவாரப் பணியையும் செய்வதுண்டு.

ஒரு தடவை கருவறையின் வெளிச் சுவரின் அடிப்பாகத்தில் - மண்ணில் புதைந்து காணப்பட்ட கல்வெட்டைக் கண்டேன். மதுரையிலுள்ள தொல்லியல் துறையைச்

# அம்மையே... அங்காள பரமேஸ்வரி!



சேர்ந்த டாக்டர் வேதாசலத்தை அழைத்துச் சென்று காட்டினேன்.

அவர் "இக்கோயில் 700 ஆண்டுகள் பழமை வாய்ந்ததாக இருந்திருக்கிறது. ஆனால்,

**"குலதெய்வத்தின்**

**கோயிலுக்கு**

**விமோசனம் வந்துவிட்டது"**

கோயில் அமைப்பு நாயக்கர் காலத்தைக் காட்டுகிறது. சதுர்வேதி மங்கலத்திலிருந்து இங்கு வந்து பூஜை செய்வதற்கு, நிலங்கள் இறையிலியாகக் கொடுத்ததைத்தான் இந்தக் கல்வெட்டு கூறுகிறது" என்றார்.

அங்காள பரமேஸ்வரி - வாலகுரு நாதர் (சிவன்) வீரபத்திரர், மாயாண்டி, கருப்பர், காளி என 21 பந்தியுள்ள இக்கோயில், நாளுக்கு நாள் சிதிலமாகிக் கொண்டிருந்தது.

பரமக்குடி சோமசுந்தரம் ஐயர், மெத் தானியாபுரம் ஆலடியான், புல்வாக்கரை ஞானசேகரன், புளியங்குளம் மாயக்கண்ணன், பெருங்கரை ராசுப் பிள்ளை போன்றோருடன், சிவ சங்கை மாலதி பாலசுப்பிரமணிய னும் என்னுடன் களத்தில் குதித்தனர்.

ஒரு, முறையான கமிட்டி அமைக்க முடிவு செய்து, 6.8.2000ல் பொதுக் குழுவைக் கூட்டியதில், 108 பேர் வந்து கலந்து கொண்டனர்.



* புதிய அழகு!

என்னை கமிட்டித் தலைவராக் கியது பொதுக்குழு. ஒரு வீட் டுக்கு 1000 ரூபாய் வரியென்றும், கமிட்டியிலிருப்பவர்கள் தலா 10 ஆயிரம் தர வேண்டுமென்றும் தீர்மானம் போட்டோம்.

ஒரு நல்ல நாளில், சிவாச்சாரி யார்கள் கணித்துக் கொடுத்தபடி பூமி பூஜை செய்து, ஜே.சி.பி. இயந்திரம் மூலமாக கோயிலை இடித்துக் கட்டத் தொடங்கியபோது, சில பத்திரிகைகளில் படத்துடன் இக்கோயிலைப் பற்றி செய்தி கள் வெளியிட்டோம். இதைப் படித்து விட்டு சென்னையிலிருந்தும், வெளிமாநிலங் களிலிருந்தும் பலர் என் முகவரிக்கு "எங் களுக்கும் குலதெய்வக் கோயில் அந்தக் கோயில்தான்" என்று தகவல் தந்தனர். குறிப்

# கோயில் பழசு கோலம் புதுசு

பாக, ஐயப்பன் பாடல் புகழ் கே.வீரமணி யின் சகோதரர் வீரமணி சோமு, வீரமணி ராஜு, மணிபாரதி, ரெங்கநாதய்யர், சாமி நாதய்யர், ரெங்கபதி, சண்முகம், நேதாஜி



போன்றோர் சென்னையிலிருந்து தங்கள் 'குல தெய்வத்தின் கோயிலுக்கு விமோ சனம் வந்து விட்டது' என்று மகிழ்வுடன் நிதியை தாராளமாக அளித்து உதவினர்.

சாத்திரப்படி கோயிலைக் கட்டி னோம். 7.2.2003ல் இந்து முன்னணி



* பழைய கோயில்

ஸ்தாபகர் இராம கோபாலன் தலைமை யில், கோலாகலமாக கும்பாபிஷேகத்தை யும் நடத்தி விட்டோம். ஊர் மக்களின் குறைகளைத் தீர்த்து, வாழ்க்கைக்கு வளம் சேர்க்கும் அங்காள பரமேஸ்வரிக்கு ஆலயம் அமைக்க, என்ன பாக்கியம் செய்தேனோ?

- இரா. கல்யாணசுந்தரம், மதுரை

புதிய ஹாலிவுட் படங்கள் ஃபிளைட் பிடித்து இங்கே வந்து சேர்வதற்கு சிறிது நேரமாகும் என்பதால், உங்களுக்காக ஒரு க்விக் ரஷ்.

## தி ரிங் 2

பேய், காத்து கருப்பு, ஆவி இவையெல்லாம் உங்களுக்கு கொள்ளை இஷ்டம் என்றால், தி ரிங் 2 உங்களுக்காகத்தான். இந்த படத்தில் வரும் 'வெரி நாட்டி' பெண் பேயின் பெயர் சமாரா (ஆண் பேய் எல்லாம் ரொம்ப சமர்த்தாக்கும்!) எந்தக் காரணத்தினால் என்று தெரியவில்லை. ஆனால் இந்தப் பேய் எப்பொழுதும் கிணற்றுக்குள்ளே தான் தங்கியிருக்கும்.

தி ரிங் முதல் பகுதியில் இந்தப் பேயை கெல்லர் மற்றும் அவளது மகன் அய்தன் இருவரும் சேர்ந்து விரட்டி விடுகிறார்கள். அதாவது விரட்டி விட்டதாக நினைத்துக் கொள்கிறார்கள். ஆனால் தி ரிங் 2வுக்காக இந்தப் பேயை மறுபடியும் கிணற்றுக்குள்ளிருந்து சிரமப்பட்டு வெளியே இழுத்து வந்திருக்கிறார் டைரக்டர்.

சிறுவன் அய்தன் அதைப் பார்த்து விடுகிறான். வீட்டில் ஏதேதோ தன்னந்தனியே உளறுகிறான். 'அட இதென்ன நாய்குட்டி மாதிரி எங்கே கொண்டு போய் விட்டாலும் திரும்ப ஓடி வந்து விடுகிறதே' என்று அம்மா கெல்லரும் சலிப்படைகிறாள். பேய் துரத்த, இருவரும் ஓட... மறுபடியும் இருவரும் சேர்ந்து பேயை ஓட்டிவிட... தி என்ட்.

தி ரிங் 3 என்று ஒன்று எடுத்தால் கட்டாயம் மறுபடியும் இந்தப் பேய் வெளியே வரும். டோண்ட் ஒர்ரி. இந்த மாதிரி பேய்ப் படங்களை பார்த்துப் பார்த்து பலருக்கு பேயை ரொம்பப் பிடித்துப் போய் பேசாமல் ஏதாவது ஒன்றைப் பிடித்து வந்து பெட் அனிமலாக வளர்க்கலாமா என்று யோசித்துவருவதாக நம்பத்தகுந்த வட்டாரங்கள் தெரிவிக்கின்றன.



## ரோபா... ரோபி... காதல் சென்டர் லவ்!

## மில்லியன் டாலர் பேபி





**க**ம்ப்யூட்டர், கிராஃபிக்ஸ், ராட்சசப் பாம்பு, மெகா சைஸ் பல்லி, மிதக்கும் வேற்று கிரக வாசிகள் போன்ற எலக்ட்ரானிக்ஸ் சமாசாரங்களை ஓரங் கட்டிவிட்டு, மனித உறவுகளுக்கும், உணர்ச்சிகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்து எடுக்கப்பட்ட படம், மில்லியன் டாலர் பேபி. இந்தப் படம் ஆஸ்காரை அள்ளிக் கொண்டு வந்து கொடுத்ததில் வியப்பில்லை. கதை முழுக்க முழுக்க மூன்றே மூன்று முக்கியக் கதாபாத்திரங்களை சுற்றிச் சுற்றி வருகிறது.



க்ளிண்ட் ஈஸ்ட்வுட் ஒரு பயிற்சியாளர். இவருடைய நண்பர் மார்கன் ஃப்ரீமேன், முன்னாள் பாக்ஸிங் ப்ளேயர். (இந்த இருவருக்குமிடையேயான உறவு மிக அழகாக வெளிப்படுகிறது). ஒரு நாள், ஈஸ்ட் வுட்டின் ஜிம்முக்கு பாக்ஸிங் பயிற்சி எடுத்துக் கொள்ள வருகிறாள் மேகி. 35 வயதுப் பெண் ஒருவருக்கு இதெல்லாம் எதற்கு என்று சொல்லி திருப்பி அனுப்பி விடுகிறார் ஈஸ்ட் வுட். ஆனால் அவளது உறுதியையும் தன்னம்பிக்கையையும் பார்த்து வியந்த அவர், பின்னர் தனது முடிவை மாற்றிக் கொள்கிறார். ஆரவாரமில்லாத கதையமைப்பு. ரசிக்க வைக்கும் இயல்பான நடிப்பு, நகைச் சுவை பூசப்பட்ட காட்சியமைப்புகள், இவை மூன்றும் கலந்த மில்லியன் டாலர் பேபி, ஒரு போஷாக்கான எமோஷனல் பேபி.

## ரோபோஸ்

**ச**ரி சரி, எமோஷன்ஸ் எல்லாம் போதும், எலக்ட்ரானிக்ஸ் தான் வேண்டும் என்று அடம் பிடிப்பவர்களுக்கு, சுடச்சுட ஹைடெக் விருந்து தர காத்திருக்கிறது ரோபோஸ். கவலை வேண்டாம். இந்தப் படத்தில் மருந்துக்கு கூட மனித கதாபாத்திரம் கிடையாது. எல்லாமே பளபளக்கும் இயந்திரங்கள் தான்.

கதை? ரோட்னி ஒரு புத்திசாலி யூத் ரோபா. அவனுக்கு (அதற்கு?) ஓர் ஆசை - உருப்படியாக ஒன்றையும் செய்யாமல் மனிதர்களைப் போல நேரத்தை வீணடிக்கும் மற்ற ரோபோக்களை எப்படியாவது திருத்த வேண்டும். அதற்காக சில எலக்ட்ரானிக்ஸ் கண்டுபிடிப்புகளை நிகழ்த்த வேண்டும். ஆனால் வில்லன் ரோபோவுக்கு திருந்துவதில் அவ்வளவாக விருப்பமில்லை. ஒரு வேளை வில்லன் ரோபோ என்பதால் இருக்கலாம்.

மனிதர்கள் மட்டும் தான் காதலிக்க வேண்டுமா என்ன? அவசியமில்லை. ரோட்னியும் அவனுடைய கேர்ள் பிரண்ட் ரோபோவும்கூட காதலிக்கலாம். ஆனால் எப்படி? கம்ப்யூட்டரையோ, கால்சென்ட்டரையோ சுற்றி வந்து டூயட் பாடுமா? பீச்சுக்குப் போனால் இரண்டும் சுண்டல் சாப்பிடுமா? தன் கேர்ள் ஃபிரண்ட்டுக்கு, ரோட்னி என்ன கிப்ட் வாங்கிக் கொடுக்கும்? இவை போன்ற இன்னபிற விஞ்ஞான தொழில்நுட்ப கேள்விகளுக்கான விடைகளை, இந்தப் படத்தைப் பார்த்து தெரிந்து கொள்ளலாம்.

- மருதன்

அநுராதா ரமணன்

# மாம் ஃப்ரம் இண்டியா



கிஷோருக்கு, தன் மனைவியின் சோகத்தைக் கண் கொண்டு பார்க்க முடியவில்லை.

இதற்காகவே, அவளை அழைத்துக் கொண்டு, ஷாப்பிங் மால் போய், பிறக்கப் போகும் பாப்பாவுக்காக தொட்டில், மெத்தை... தவிர, பிரியம்வதா வசதியாய் உட்கார்ந்து, குழந்தைக்குப் பால் புகட்ட 'Lazy Boy' என்கிற ஆடுகிற, படுக்கிற, சாய்ந்து கொள்கிற, இன்னும் அதிலேயே, குடித்தனம் நடத்துகிற அளவுக்கு என்னென்னவோ செளகரியங்கள் கொண்ட சோபா நாற்காலியை வாங்கிக் கொண்டு வந்து போட்டான்.

பல்பீர் சிங், பரமேஸ்வர் ஜோடி - லட்சுமிகாந்த், பியாரிலால் ஜோடி போல - விசுவநாதன், ராமமூர்த்தி இணை போல - எங்கே போனாலும் ஒன்றாகப் போய், ஒன்றாகப் பாடி,

ஒன்றாகவே அழுதுவிட்டு வருகிறார்கள்.

இப்பொழுதெல்லாம், மியூசிக் சேனலில் பரமேஸ்வரன் இல்லாத நிகழ்ச்சியே இல்லை.

தவிர, ஒவ்வொரு தமிழ்க் குடும்பமும், பரமுவை அழைத்து, வீட்டிலேயே பாடச் சொல்லி, சின்னதாய் ஹோம் கான்ஸர்ட் வைத்து, வெற்றிலைப்பாக்குடன் டாலர்களை சன்மானமாக அளித்து அனுப்பியது...

டலாஸ்ஸில் இரண்டு தமிழ் பெண்கள் சந்தித்தால் - உடனேயே பரமேஸ்வர் - பல்பீர்சிங்கின் 'கஜல்' பற்றிப் பேசாவிட்டால் அதிசயம்...

இத்தனைக்கும் நடுவில் தேடல் வேட்டையும் நிற்கவில்லை.

அன்றைக்கு வந்த, 'அமெரிக்கன் டைம்ஸ்'ஸில், ஹோலி மதர் பற்றி, போட்டோவுடன் சின்னதாய் ஒரு மேட்டர் வந்திருந்தது.

அந்தப் பெண்மணியின் பிரார்த்தனையால், சிக்கலான பிரசவங்கள்கூட, சுகமாக முடிந்து விடுவதாக வெளியாகியிருந்தது.

ராஷ்மிதான் பார்த்தாள். ஹோலி மதரின் முகம் தெரியவில்லை. தலையில் தொப்பியும், வாயைச் சுற்றி, கிருமிகள் பரவாமல் தடுக்கும் மெல்லிய துணியினாலான 'மாஸ்க்' கட்டியிருந்ததால் அடையாளம் தெரியவில்லை.

ஆனாலும், கணவரிடம் கேட்டாள்.

"யாரோ ஹோலி மதராமே... நாம் வேணுமானாப் போய், சுகந்தா பத்தி கேட்கலாமா?"

பல்பீருக்கு இந்த ஜோதிடம், நியூமராலஜி இதிலெல்லாம் நம்பிக்கையே இல்லை.

தவிர, இன்றைக்குப் பரமேஸ்வரனை, அமெரிக்க ஜனாதிபதி புஷ், தன்னுடன் தேநீர் அருந்த அழைத்திருந்தார்.

பல்பீர்தான் பரமேஸ்வரனுக்குக் கோட், சூட் அணிவித்து, ஜனாதிபதியுடன் தேநீர் விருந்தில் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகளை எல்லாம் சொல்லிக் கொடுத்து, ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தார்.

தேநீர் கோப்பையை எப்படி எடுக்க வேண்டும்... எப்படி உறிஞ்ச வேண்டும். மறுபடி கோப்பையை பீங்கான் தட்டில் 'கிளிங்'காமல்

கலகல தொடர்

எப்படி வைக்க வேண்டும்...

டீ குடித்தவுடன் மறந்து போய் வெற்றிலை பாக்கு பொட்டலத்தைப் பிரிக்கக் கூடாது...

சப்புக் கொட்டி சாப்பிடக் கூடாது.

ஸ்பூனைக் கவிழ்த்து வைத்து விட்டால், சாப்பிட்டு முடித்து விட்டதாக அர்த்தம்... அப்புறம் திரும்ப எதையும் தின்று தொலைக்கக் கூடாது....

"ஒரு கப் டீக்கு இந்த ஊர்லே இத்தனை சம்பிரதாயமா... அட, போங்கோ சம்பந்தி... நானே சுகந்து இல்லாம, சீதா தேவியைப் பறி கொடுத்த ராமன் மாதிரி இருக்கேன். நான் இப்ப வர சௌகரியப்படாதுன்னு சொல்லிடுங்கோ..."

"அய்யய்யோ... அப்படியெல்லாம் சொல்லக்கூடாது பரம்ஜீ... நான்தான் கூடவே வர்றேனே... அப்புறமென்ன... ஆனா, அங்கே பிரசிடெண்ட் புஷ், உங்களைப் பாடச் சொன்னா, அந்த 'மன்மத லீலையை வென்றார் உண்டோ' - பாடாதீங்க பரம்ஜீ..."

"ஏன்?"

"அது- சாருகேசி இல்லே? ஆரோ கணத்துல 'ரி'டு...'க்டு... வரும்... என் ஆர்மோனியத்துல அது ரெண்டும் தகறார் பண்ணுது.. 'ரி' டு, 'க்'டு வராத ராகமா எடுங்க.."

பல்பீர்சிங் சங்கீதத்தில் இந்த அளவுக்குத் தேறிவிட்டார்.

இந்த சமயத்தில் போய் ஹோலி மதர் அது இது என்றால்...

"ஓ-நயி பியாரி.. அதெல்லாம் சுத்த ஹம்பக்.. டாலர் வேஸ்ட்.. டைம் வேஸ்ட்..."

ப்ரியம்வதா, தான் வாங்கிய Lazy boy சோபாவிலேயே பூனைக்குட்டி மாதிரி சுருண்டு கிடந்தாள்.

கிஷோர், அவளுக்கு ஸ்பூனால் சாதத்தை எடுத்து ஊட்ட பிரும்மப் பிரயத்தனம் செய்துகொண்டிருந்தான்.

"என் கண்ணில்லே... தங்கமில்லே... ஒரு நாலு ஸ்பூன்டா..."

"நீங்க நகருங்க மாப்பிள்ளே... ப்ரியாவுக்கு நான் ஊட்டறேன்..."

ஊட்டிக் கொண்டே பரமேஸ்வரன் மாப்பிள்ளையை விரட்டினார்.

"பார்த்துண்டே நின்னுண்டிருந்தா எப்படி... அந்த டீ.வி.யப் போடுங்கோ... அதுல, டெலிவரிகளாக் காட்டுவாங்களே... எது என்ன சேனல்..."

"டி.எல்.சி..."

"அப்படியின்னா?"

"தி லேர்னிங் சேனல்னு அர்த்தம்."

"ஆங்... அதைப் போடுங்கோ... என் ராஜாத்தி, இன்னும் ஒரு மாசத்துல உனக்கும் இது மாதிரி... ஆமா... ராஜாப் பயலா... ராணிக்குட்டியா... எனக்கு பேத்திதான் வேணும். குட்டி சுகந்தான்னு கூப்பிடுவேன்..."

பிரியம்வதா எதையும் காதில் வாங்கிக் கொள்ளாமல், டீ.வி திரையிலேயே விழிகளைப் பதித்திருந்தாள்.

"எல்லாம் இருக்கறபடி இருந்திருந்தால், அம்மாவும் என்கூட இது மாதிரி, லேபர் தியேட்டருக்கு வருவா இல்லையா கிஷோர்?"

அவள் அழுகையில் வெடிக்க, கிஷோர் எரிச்சலுடன் டீ.வியை அணைக்க, ரிமோட்டை எடுக்க -

"கொஞ்சம் இருங்க மாப்பிள்ளே..."

- பரமேஸ்வரன் குறுக்கே விழுந்து தடுத்தார்.

திரையில், மெகா சைஸ், தென்னாப்பிரிக்கப் பெண்மணி ஒருத்தி, பிரசவ வலியில் அழுது கொண்டிருக்க... அவளருகே கைகளைப் பிசைந்தபடி அவள் கணவன்... இந்தப் பக்கம் இரண்டு நர்சுகள்... ஒரு டாக்டர்...



"தலைவரின் கையை மசாஜ் பண்றாங்களே..."
"அவரது கரத்தை பலப்படுத்துறாங்களாம்..."
- எஸ். மோகன்

பிள்ளைத்தாய்ச்சிப் பெண்ணின் தலையைத் தடவியபடி... அவளது தாய் போல...

"இதென்னது அம்மாக்காரி மொசக் குட்டி மாதிரி இருக்கா... பொண்ணு இப்படி... நிறமும் ஒத்து வரல்லே..."

"அதெல்லாம் இங்கே சகஜம்பா..."

முதல்முறையாய் வாய் திறந்த ப்ரியம்வதா, அப்பா ஊட்டிய ரசம் சாதத்தை விழுங்காமல், திறந்தவாய் திறந்தபடி அப்படியே உட்கார்ந்திருந் தாள்...

"அப்பா..."

"என்னம்மா... ரசம் சாதம் தித்திக் கறதோ... உங்க மாமியாருக்கு எதுல தான் சர்க்கரையைப் போடறதுன்னே இல்லே... உங்கம்மா பண்ணுவா பாரு ஒரு தக்காளி ரசம்... அடேயப்பா... மைலாப்பூர் கபாலீஸ்வரர் கைய நீட்டுவார்... எனக்கு ஒரு கப்புனு...."

"ஷ்... கொஞ்சம் கம்மாயிருங்கோ... உத்து கவனிங்கோ... ஏதோ சுலோகம் கேட்கலே...?"

"எங்கே... எங்கே...?"

"டீ.வியிலப்பா... இந்த சுலோகம் என்னது... ஐயோ...எனக்குக் கூடத் தெரியும்..."

பரமேஸ்வரன், கையிலிருந்த கிண்ணத்தைக் கூட கீழே வைக்காமல், டீவி திரையிலேயே காதைப் பதித்துக் கேட்டார். கிஷோர், ஒலியை அதிகமாக்கினான்.

"பீம் ரூபதரி
அஸுர ஸம் ஹாரே...
ராமசந்த்ர கே காஜ்
ஸவாரே..."

"அம்மா சொல்ற 'அனுமன் சாலீஸா' ப்ரியா, இதென்னது அமெரிக் காக்காரி சொல்றா...!!"

இதற்குள் இரண்டு ஆரோக்கியமான கறுப்புக் குழந்தைகளைக் காட்டியது டீவி...

பிரசவித்தவள், தன் பக்கத்தில் அது நேரம் வரையில் உட்கார்ந்திருந்த மொசக்குட்டி அம்மாவின் கையைப் பிடித்து முத்தமிட் டாள்.

கூடவே இருந்து லோல்பட்ட புருஷன்காரன், குழந்தைகளை அந்தத் தாயிடம் பணிவுடன் நீட்டினான்.

"ப்ளீஸ் நேம் இட்!"

"பாய் அண்ட் கேர்ள்..."

குழந்தைகளை வாங்கியவள், இது நேரம் வரையில் வாயில் கட்டியிருந்த துணியைக் கீழிறக்கிவிட்டு, நாத் தழுதழுக்கக் கூறினாள்.

"பரமேஸ்வரன்... பரமேஸ்வரி..."

அடுத்த காட்சியாக, குழந்தைகளை இரு கைகளிலும் தூக்கியபடி டாக் டர்...

"ஸீ...பரமேஸ்வரன் வில்லியம்ஸ்... பரமேஸ்வரி வில்லியம்ஸ்..."

**பா**ர்த்துக் கொண்டே நின்ற பர மேஸ்வரனுக்குப் பேச்சு வரவில்லை. மெய் மறந்து போய், கையிலிருந்த ரசம் சாதத்தை, ப்ரியாவுக்கு ஊட்டுவதற்குப் பதிலாகத் தன் வாயிலேயே போட்டுக் கொண்டார்.

"காட்ச் ஹிம்!"

பல்பீர் சிங், தன் நிலை மறந்து கர் ஜித்தார். கிஷோர், இதற்குள் போலீசுக்கு ஃபோன் செய்ய, ப்ரியம்வதா, தன் டாக் டருக்கு ஸெல்லில் பட படத்தாள்.

கேள்வி கேட் டவள், அந்தப் பெண் மணி யார், எங் கிருந்து வந்தாள், யார் அழைத்துக் கொண்டு வந்தார்கள், இதையெல்லாம் கேட் பதை விட்டு, 'அந்த டிவின்ஸ் ஸோடப் பேரண்ட்ஸ் எங்கே இருக் காங்க' என்றுதான் கேட்டாள்.

டாக்டர், கர்ம சிரத் தையாய் அந்த தென் ஆப்பிரிக்கத் தம்பதி யின் விலாசத்தைக் கொடுத்ததோடு மட்டு மின்றி, ஹோலி மதர்

"சீரியலை இப் படி ஜவ்வா இழுக்கக் கூடாது!"

"ஏன் அப்படிச் சொல்ற?"

"ஒரு எபிசோடு முடியறப்ப 'என்றும் தொடரும்'னு போடு றாங்களே!"

- அம்பை தேவா







# அ...ஆ...ன்னா அழகான ஆட்டமா?

● தமிழில் 'தம்பி' ஹிந்தியில் 'ராம்ஜி... லண்டன் வாலே' (நளதமயந்தியின் ஹிந்தி ரீமேக்) என இரண்டு படங்கள் ரிலீஸாகின்றன மேடிக்கு.

● எஸ்.எஸ். மியூசிக் சேனலின் 'S5' குழு அடுத்ததாக 4 ஸ்டூடன்ஸ் இயக்குனர் ஜெயராஜின் அடுத்த படத்தில் பின்னணி பாடுகிறது.

● எஸ்.ஜே. சூர்யாவின் 'அ ஆ' படத்தில் ஒரே ஒரு பாடலுக்காக ஆடுகிறார் கரீனா கபூர்.

● 'ஆய்த எழுத்து'க்குப் பிறகு வேறெந்த தமிழ்ப் படங்களிலும் நடிக்கப் போவதில்லையாம் ஹேமமாலினியின் புத்ரி இஷா தியோல்.

● கமலின் 'வேட்டையாடு விளையாடு' படத்தின் அனைத்துப் பாடல்களையும் கவிஞர் தாமரை எழுதுகிறார்.

● 'மெட்டி ஒலி' கேம்பிலிருந்து இயக்குனர் திருமுருகனும், போஸூம் சீரியஸாக சினிமாவுக்குள் நுழைய ஆயத்தமாகிறார்கள்.

- ச.ந.

---

மகிமை பற்றியும் குட்டி லெக்சர் அடித்தாள்.

"அப்ப... அது..."

"எஸ்...எஸ்... பிரேயர் செய்யறாங்க பாரு.... ஷி ஸ் த ஹோலி மாம்.. நம்ம ஸ்டீஃபன், ஜெனட் தெரியுமில்லே... அதான்... உன் ஃபிரண்ட்... அந்த ஜெனட்டோட மாம்... வாவ்...வாட் எ டிவைன் லேடி..."

"மாம்...மாம்..."

சுகந்தா அழுது கொண்டிருந்த நேரத்தில் -

இங்கே ஜெனட்டின் வீட்டில், குழந்தைக்கு குளிப்பாட்டி, மையிட்டு, பொட்டிட்டு, சாம்பிராணி புகை போட்டு, ஜெனட்டுக்கும் தலைக்கு எண்ணெய் வைத்துக் குளிப்பாட்டி, பருப்புத் துவையலும், மிளகுக் குழம்புமாய் சுடச் சுடப் பத்தியம் சமைத்துப் போட்டு, வெற்றிலையில் கஸ்தூரி வைத்துக் கொடுத்து...

"குழந்தைய இப்படி வச்சுண்டு எடுத்து விடு - அந்த டாக்டர் என்னமோ வாகே இல்லாம நூத்தியெட்டு விதமாச் சொல்லிக் கொடுத்ததெல்லாம் வேஸ்ட்... குழந்தைக்குப் பால் கொடுக்கறப்ப குழந்தை வேணுமானா டிரஸ் போடாம இருக்கலாம்... 'அம்மாவும் அப்படியே உட்கார்ந்து கொடுக்கணும்; அப்பத்தான் குழந்தைக்கு அம்மாவோட உடம்பு சூடு கிடைக்கும்'னு என்னென்னமோ பேத்தறாளே... அதெல்லாம் சரிப்பட்டு வராது... நாங்க எல்லாம் கொடுக்கலையா... கல்யாணக் கூட்டத்துலேயும், ரயில்லேயும், பஸ்லேயும்..."

பேசிக்கொண்டே போன சுகந்தா, வாசலில் காலிங்பெல் ஒலிக்க, திறக்கப் போன ஸ்டீஃபனை ஒருகணம் நிறுத்தினாள்.

"இருடாப்பா... அவ குழந்தைக்குப் பால் கொடுக்கறாளோ இல்லையோ... உள்ளே போடீம்மா.... ஒருத்தர் கண் போல இருக்காது..."

ஜெனட் குழந்தையுடன் நகர, ஸ்டீபன் வாசற்கதவைத் திறந்தான்.

(அடுத்த இதழில் நிறைவுறும்)

பா.ராகவன்

2

# பின்கதைச் சுருக்கம்



அசோகமித்திரனை நினைத்ததும் எனக்கு உடனே ஞாபகத்துக்கு வரும் படைப்பு, அவருடைய 'ஒற்றன்'.

நீங்கள் 'ஒற்றன்' நாவலைப் படித்திருக்கிறீர்களா? கதையை அல்லாமல், களத்தை மையமாக வைத்த படைப்பு அது. ஒரே களம். வேறு வேறு நபர்கள். ஆனால் அத்தனை சந்தர்ப்பங்களிலும் ஒரு பார்வையாளராக அசோகமித்திரன் அங்கே இருப்பார்.

1973ம் ஆண்டு, அமெரிக்காவில் அயோவா நகரில் உள்ள ஒரு பல்கலைக் கழகம், ஏழு மாத காலத்துக்கு ஓர் எழுத்துப்பட்டறை நடத்தியது. அந்த எழுத்துப்பட்டறைக்கு, இந்தியாவிலிருந்து அசோகமித்திரன் போயிருந்தார்.

எழுத்தாளர்கள்தான் எத்தனை வினோதமானவர்கள்! நூறு விதமான விதைகளை ஒரே தொட்டியில் விதைத்து, அது முளைப்பதை ஏழு மாதம் கூர்ந்து கவனிப்பதென்பது எப்பேர்ப்பட்ட அரிய வாய்ப்பு!

ஒற்றனில் ஒரு எத்தோப்பிய எழுத்தாளன் வருவான். அயோவாவுக்கு வந்து சேரும் முதல் நாளில் ஏகப்பட்ட பணம் கொடுத்து துணி வாங்கி, கோட் சூட் தைத்துப் போட்டுக் கொள்ளும் அவன், அந்த ஏழு மாத காலமும் அந்த கோட் சூட்டுடனேயே வலம் வந்து

கதையின் கதை!



கொண்டிருப்பான்.

இன்னொரு ஒடிசலான, குடிகார எழுத்தாளன். ஊருக்கு வந்து சேர்ந்ததும் ஒரு டைப்ரைட்டர் வாங்குவதற்காக அசோகமித்திரனை ஒரு சூப்பர் மார்க்கெட்டுக்கு அழைத்துப் போவான். கேமார்ட் என்கிற அந்தக் கடையில் அவனுக்கு அசோகமித்திரன் வாங்கித் தரும் டைப்ரைட்டர் கொஞ்சம் விநோதமானது. ஓர் எழுத்தை அழுத்தினால், நான்கு எழுத்து தூரத்துக்கு ஓடிவிடும்.

கிஜுகோ என்றொரு ஜப்பானியப் பெண் கவிஞர். பால் எங்கிள் என்றொரு இலக்கியப் பேராசிரியர். ஜான் ஸ்டுவர்ட் என்கிற விடுதி மேலாளர். தைவான் சிறுகதையாசிரியன், சிலி நாவலாசிரியன். இலக்கியம் படிக்க வந்து காதலில் மாட்டி அவதிப்படும் ஒரு மாணவி என்று, நாவலின் ஒவ்வொரு அத்தியாயமும் வேறு வேறு நபர்களால் நிறையும் ஆச்சர்யம் இது.

நபர்கள் மட்டுமல்ல. அசோகமித்திரனின் இந்த நாவலில் அயோவா நகரத்தின் குளிரும்கூட ஒரு கதாபாத்திரமாகவே இருக்கும். குளிர் என்றால் சாதாரணக் குளிர் அல்ல. வாசிக்கும்போதே எலும்புகளை நடுங்கச் செய்யும் குளிர். தரையெங்கும் படர்ந்திருந்த பனியில் அசோகமித்திரன் ஒருமுறை சறுக்கி விழுந்து அடிபட்டிருக்கிறார். அந்த ஓர் அத்தியாயம் முழுவதும் நமக்கும் வலித்துக் கொண்டே இருக்கும்.

'ஒற்றனி'ல் நமக்குக் காணக் கிடைக்கும் ஒவ்வொரு எழுத்தாளரும் ஒவ்வொரு நாட்டைச் சேர்ந்தவர்கள். வேறு வேறு கலாசாரத்திலிருந்து வந்தவர்கள். தென்னமெரிக்க எழுத்தாளர்களெல்லாம் சர்வாதிகார ஆட்சியையும், தினமொரு புரட்சியையும் பார்த்துக் கொண்டிருப்பவர்கள். ஆசிய எழுத்தாளர்கள் எல்லாம் கனவுகளை மட்டும் சுமந்து நிற்பவர்கள். கண்டப் பாகுபாடில்லாமல் ஏழை தேசங்களிலிருந்து வந்து கூடும் எழுத்தாளர்கள் அத்தனை பேருக்குமே, அமெரிக்கா வியப்பையும் பிரமிப்பையும் தரத் தவறுதில்லை. அவரவர் தேசங்களில் சிங்கம் போல் வலம் வரும் படைப்பாளிகள் அத்தனை பேரும், அமெரிக்காவுக்கு வந்தவுடன்தான் எப்படி கார்ட்டூன் சிங்கங்களாக மாறி விடுகிறார்கள்!

இது கதை சுவாரசியத்துக்காகச் செய்யப்பட்ட வேலையல்ல. மாறாக, ஒவ்வொரு எழுத்தாளரையும், ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும், ஒரு தேர்ந்த நிருபரின் கூர்மையான பார்வையுடன் கவனித்து, அலசிப் பார்த்து, மனத்துக்குள் ஊற வைத்து (கொஞ்ச நஞ்சமல்ல; பத்தாண்டுக் காலங்கள்!) அதன்பின் ஓர் எழுத்தாளரின் அசலான பரிவு கலந்த பார்வையில் பதிவு செய்திருக்கிறார் அசோகமித்திரன். கதையில் நகைச்சுவையான கட்டங்கள் ஏராளமாக உண்டு. ஆனால் ஒவ்வொரு நகைச்சுவையும் வாசித்த மறுகணம் உறையச் செய்து விடுபவை, அயோவாவின் பனிமழை போலவே. பட்டறைக்கு வந்திருந்த ஒரு ஜப்பானியப் பெண் கவியைத் தனக்கு அறிமுகப்படுத்தி வைக்கவில்லை என்பதற்காக, அசோகமித்திரனை அந்த எத்தியோப்பிய எழுத்தாளன் படுத்தும்பாடு கொஞ்ச நஞ்சமல்ல. அடித்துக் கீழே தள்ளிவிடும் அளவுக்கு எழும் அவனுடைய முரட்டு சுபாவத்தின் பின்னணியில் அவன் வளர்ந்த கலாசாரம் இருக்கிறதா? அல்லது உலகப் பொதுவான பொறாமை மட்டும்தானா?



அசோகமித்திரனைக் கேட்டால், "எழுத்தாளர்கள் என்கிற பொதுவான அம்சம் இருந்தாலும், ஒவ்வொரு எழுத்தாளரும் தத்தமது தேசங்கள், மற்ற எழுத்தாளர்களின் தேசங்களோடு கொண்டுள்ள உறவின் பாதிப்பிலிருந்து மீளவே இல்லை. சிலி எழுத்தாளரைக் கண்டால், பெரு எழுத்தாளருக்குப் பிடிக்காது. தைவான்காரரை ஜப்பான்காரருக்குப் பிடிக்காது. பெண் எழுத்தாளர்கள், சக பெண் எழுத்தாளர்களை ஒரு போதும் ஒரு பொருட்டாக மதிக்கவே மாட்டார்கள். நேரில் சந்திக்கும்போது மட்டும் கட்டிப் பிடித்து அன்பைப் பொழிவார்கள். பின்னால் பேசும் பேச்சைக் கேட்க வேண்டுமே!" என்றார்.

இந்த நாவலின் ஒரு குறிப்பிட்ட அத்தியாயம் - அதில் வரும் ஒரு பெரு தேசத்து எழுத்தாளனைப் பற்றி வாசித்த போது, எனக்கு ஏற்பட்ட வியப்பைச் சொல்லாமல் இருக்க முடியாது. அந்த அத்தியாயத்துக்கு 'மகா ஒற்றன்' என்று பெயர். அது, அந்த பெரு தேசத்து எழுத்தாளன் அயோவாவுக்கு வந்து எழுதிய நாவலின் தலைப்பும்கூட.

எழுத்தாளர் பட்டறைக்கு வந்துவிட்டு யாராவது அறையைப் பூட்டிக் கொண்டு உட்கார்ந்து நாவல் எழுதுவார்களா?

"ஆமாம். அவன் அப்படித்தான் இருந்தான்" என்றார் அசோகமித்திரன். ஒரு மாலைப் பொழுதில் அண்ணாசாலையில் உள்ள புக்பாயிண்ட் அரங்கில், ஏதோ ஒரு கூட்டத்தில் சந்தித்தபோது பேசிக் கொண்டிருந்தேன். அந்த பெரு தேசத்து எழுத்தாளனின் பெயர் ப்ராவோ. பெயர் உண்டாக்கும் பிம்பம் போலவே உயர்ந்த, அகன்ற மனிதன். பெரிய மீசை வேறு வைத்திருந்தானாம். அசோகமித்திரன் சொன்னார். "திடீரென்று ஒரு நாவல் எழுத வேண்டும் என்கிற உத்வேகம் ஏற்பட்டு, பட்டறை வகுப்புகளுக்கெல்லாம் போகாமல் அறைக்கதவை இழுத்துச் சாத்திக் கொண்டு எழுத ஆரம்பித்துவிட்டான் அவன்."



அசோகமித்திரன் மட்டும் ஒருநாள் அப்படி அவன் என்னதான் எழுதுகிறான் என்று பார்க்கப் போயிருக்கிறார். ப்ராவோ, எழுதிக் கொண்டு இருந்தான். அவனது மேசைக்கு எதிரே சுவரில் ஒரு சார்ட் ஒட்டப்பட்டிருந்தது. செஸ் போர்ட் மாதிரி நிறைய கட்டங்கள் போட்டு, வண்ணப் பென்சில்களால் ஒவ்வொரு கட்டத்துக்கும் ஒரு நிறம் கொடுத்திருந்தான்..

அசோகமித்திரனுக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை. "இது என்ன?" என்று கேட்டிருக்கிறார்.

"இதுதான் நான் எழுதப் போகும் நாவல்" என்று ப்ராவோ சொல்லிருக்கிறான்.

"நாவலா! இதுவா!"

"ஆமாம். இதுதான் நாவல். ஒவ்வொரு கட்டத்திலும் உள்ள வண்ணம் ஒவ்வொரு பாத்திரத்தைக் குறிக்கிறது. வண்ணத்தின் இடையே சில குறிகள் இருக்கின்றன அல்லவா? ஒவ்வொரு அடையாளக் குறிக்கும் ஓர் அர்த்தம். இதோ, இந்தக் குறியை கவனி. இந்தக் கதாபாத்திரம், இந்தப் பாத்திரத்துடன் இன்ன விஷயத்தை, இந்த அத்தியாயத்தில் பேசுகிறது. அந்த வேறொரு கட்டத்தில் உள்ள வேறொரு நிறம், வேறொரு உணர்ச்சியைச் சொல்கிறது. இப்படியே என் நாவலின் ஒவ்வொரு அத்தியாயத்திலும் வரும் ஒவ்வொரு பாத்திரமும் என்னென்ன பேசுகிறது, யாருடன் பேசுகிறது, பேசுவதின் விளைவு என்ன என்பது முழுமையாக இந்த சார்ட் மூலம் எனக்குத் தெரிந்துவிடுகிறது. இதை வைத்துக் கொண்டு நாவலை ஒரே மாதத்தில் எழுதி முடித்துவிடுவேன்."

இது கதையில் வரும் நிகழ்ச்சி மட்டுமல்ல. உண்மையிலேயே ப்ராவோ அப்படித்தான், அசோகமித்திரனிடம் சொல்லியிருக்கிறான். அசோகமித்திரனுக்குத் தன் கண்களை நம்பவே முடியவில்லை. ஒரு நாவலை இப்படி ஒரு கம்ப்யூட்டர் சிப் மாதிரி சுருக்கி வைத்துக் கொண்டு எழுதி முடித்துவிட முடியுமா என்கிற பிரமிப்பு.

நான் கேட்டேன். "உண்மையாகவேவா!"

"ஆமாம்" என்று அசோகமித்திரன் சொன்னார், 'நாம்கூட முயற்சி செய்யலாம் என்று ஒரு சார்ட்டும் சில கலர் பென்சில்களும் வாங்கி, கட்டம் போட்டு ஒரு நாவலை அதில் குறிப்பால் எழுத முயற்சி செய்து பார்த்தேன். முடியவில்லை. என்னால் அதை ஒரு செஸ் போர்டு மாதிரிதான் செய்ய முடிந்தது."

ஆனால், தன்னுடைய முயற்சியில் பிராவோ வெற்றி பெற்றிருக்கிறான். சொன்னபடி ஒருமாத காலத்தில் அந்த சார்ட்டின் துணையுடன் நாவலை எழுதி முடித்திருக்கிறான்!

ஒரு நாவல் எழுதுவதில் உள்ள சிரமங்கள் புரிந்தவர்களுக்கு, இது மிகவும் வியப்பு கலந்த அதிர்ச்சியைத் தரும். அசோகமித்திரனிடம் பேசிக் கொண்டிருந்த போது, தற்செயலாகக் கேட்டேன்; "அந்த நாவலை நீங்கள் வாசித்தீர்களா?"

ஒருகணம் யோசித்துவிட்டு அவர் சொன்னார்: "ஆம், படித்தேன், சொன்னபடி அவன் சார்ட் துணையுடன் நாவலை முடித்தது உண்மைதான். ஆனால் அது கலாபூர்வமாக வெற்றியடையவில்லை."

*கலையை கட்டங்களுக்குள் அடக்கிவிட முடியுமா என்ன!*

(தொடரும்)



* டாக்டர் அனிதா



* டாக்டர் ஜெயந்தினி



* டாக்டர் ஜெயந்தி



* அழகுக்கலை நிபுணர் எம்.ஹசீனா

● எனக்கு முதல் குழந்தை நார்மல் டெலிவரி. சில வருடங்கள் கழித்தே அடுத்த குழந்தை பெற விருப்பம். காப்பர்-டி அணிய லாமா? என் சிநேகிதி வேண்டாம் என்கிறாள். இதனால் பக்க விளைவுகள் உண்டாகுமாமே.

*- சாந்தி மெய்யப்பன், திருச்சி -2*

**டாக்டர் அனிதா பார்த்தசாரதி, மகப்பேறு மருத்துவர் :**

தாய்ப்பால் கொடுக்கும் காலத்தில் மீண்டும் கர்ப்பம் அடையாமல் இருப்பது நல்லதுதான். காப்பர் டி தாராளமாக பொருத்திக் கொள்ள லாம். இது சரியான விதத்தில் தன்னை உடலில் பொருத்திக்கொள்ள, பொருத்தப்பட்ட பிறகு மூன்று மாதவிலக்குகள் வரை ஆகலாம். 85 சதவிகிதம் பேருக்கு இதனால் எந்தச் சிக்கலும் ஏற்படுவதில்லை. சிலருக்கு மட்டும் இது சரியாகப் பொருந்தும்வரை முதுகுவலி, மாதவிலக்கின்போது சற்று அதிக நாட்களுக்கு வெளிப்படுதல் என்று இருக்கலாம். புதிய சூழலுக்கு உடல் தன்னைத் தயார் செய்து கொள்ள கொஞ்சம் அவகாசம் தேவைப்படுகிறது. இதற்குள் சில பெண்கள் பயந்து கொண்டு காப்பர்-டியை நீக்கிவிடும்படி வற்புறுத்து கிறார்கள். இது அநாவசிய பயம். உங்களைப் பரிசோதிக்கும் டாக்டர் இது குறித்து சரியான விளக்கம் அளிப்பார்.

மூன்று வருடங்களிலிருந்து ஏழு வருடங்கள் வரை காப்பர்-டி சிறப்பான முறையில் வேலை செய்யும். எனவே அதற்குப் பிறகும் தொடர்வதற்கு முன்னால், அதைப் பரிசோதனைக்கு உட்படுத்துவது நல்லது.

● என் முகத்தில் நிறைய கரும்புள்ளிகள் இருக்கின்றன. அவை மறைய நான் என்ன செய்வது?

*- எஸ்.ஜெகதா, மதுரை-3*

# காப்பர்-டி ஆபத்தா?

**"ஆண்களிடம் ஈர்ப்பு ஏற்படுவது இயல்புதான்!"**

எம்.ஹசீனா சையத், ஆயுர்வேத அழகுக்கலை நிபுணர் :

நன்கு அடித்த (ஸ்மாஷ் செய்த) முட்டைகோஸ் ஒரு டீஸ்பூன் எடுத்துக் கொண்டு அதோடு பன்னீர் ரோஜாவைப் பாலில் பிசைந்து, கொஞ்சம் தேனும் விட்டுக் கலக்குங்கள். சிறிது பன்னீரும் விடலாம். இந்தக் கலவையை முகத்தில் தேய்த்துக் கொண்டு பதினைந்து நிமிடங்கள் உலரவிடுங்கள். பிறகு வெதுவெதுப்பான நீரினால் முகத்தைக் கழுவுங்கள். அதன் பிறகு குளிர்ந்த நீரினால் முகத்தை அலம்பிக் கொள்ளுங்கள்.

இப்படி வாரம் இரண்டு முறை செய்து வந்தால் முகம் பளீர் என்று ஆகும். கரும் புள்ளிகள் மறையும். புத்துணர்ச்சி பெறுவீர்கள்.



## பாலி க்ளினிக்

● என் மூன்று வயது மகன் படிக்கட்டிலிருந்து கீழே விழுந்தான். தலையில் ஒரு பக்கம் வீங்கி பிறகு சரியாகிவிட்டது. இது நடந்து ஒரு வாரம் ஆகிவிட்டது. தலையில் உள்காயம் எதுவும் பட்டிருக்குமோ, உடனே ஸ்கேன் எடுக்காதது தப்போ என்று கவலையாக இருக்கிறது. குழந்தை அடிபட்டுக் கொண்டால், உடனடியாக டாக்டரிடம் காட்ட வேண்டியதோ, ஸ்கேன் எடுக்கவேண்டியதோ அவசியமா?

*- ப்ரியா மோகன், சென்னை - 91*

டாக்டர் ஜெயந்தி விஸ்வநாதன், குழந்தைநல மருத்துவர் :

இதில் முக்கியமாக நீங்கள் கவனிக்க வேண்டியது, கீழே விழுந்தவுடன் குழந்தையின் சுயநினைவு தவறிவிட்டதா என்பது தான். அப்படியானால் உடனடியாக டாக்டரை அணுகவேண்டும்.



அடிபட்ட இடத்தில் வீக்கம் ஏற்பட்டால், ஐஸ் ஒத்தடம் கொடுங்கள். ரத்தம் கட்டிக் கொண்டிருந்தால், அந்த வீக்கம் குறையும்.

வெளியில் ரத்தக் காயமோ, வீக்கமோ தென்பட்டால், மூளையின் உட்பகுதியில் பாதிப்பு இருக்காது என்று சிலர் நினைக்கிறார்கள். அப்படியிருக்க வேண்டிய அவசியம் இல்லை.

குழந்தை அடிபட்ட அடுத்த 24 மணி நேரத்திற்கு, கீழே உள்ள விஷயங்களில் நன்கு கவனம் செலுத்த வேண்டும். மூன்று நான்கு முறைக்கு மேல் வாந்தி எடுக்கிறதா? ஒருவித மயக்க நிலையில் காணப்படுகிறதா? காது அல்லது மூக்கில் ரத்தக்கசிவு ஏற்படுகிறதா? வலிப்பு உண்டாகிறதா? தூங்கும் குழந்தையை என்ன முயன்றும் எழுப்ப முடியவில்லையா? இவற்றில் ஏதாவது ஒரு கேள்விக்கு 'ஆமாம்' என்றாலும், உடனடியாக டாக்டரிடம் அழைத்துச் செல்லுங்கள். இவற்றில் எதுவும் இல்லையென்றால், அடிபட்ட இடத்தில் உண்டான வலிக்கு பாரசிடமால் கொடுத்தால் போதும்.

**● கல்லூரி படிக்கும் மகளால் எனக்கு ஏற்படும் கலக்கம் கொஞ்சம் நஞ்சமில்லை. தொலைபேசியில் மணிக்கணக்கில் பேசுகிறாள். ஆண் நண்பர்களோடும்! கேட்டால் 'நான் சகஜமாகத்தான் பழகுகிறேன். பாடத்தில் சந்தேகம் கேட்கிறேன்' என்று சொல்கிறாள். அடக்கவும் முடியவில்லை. பொறுக்கவும் முடியவில்லை. வீட்டில் அடிக்கடி இதனால் சண்டை. ஒரு வழி சொல்லுங்களேன்.**

**- கே. சாவித்திரி, சேலம் -5**

**டாக்டர் ஜெயந்தினி, மனநல மருத்துவர் :**

"இளம் தலைமுறையினருக்கு தங்கள் எல்லை தெரியும். எனவே நீங்கள் கவலைப்பட வேண்டாம்" என்று பொதுப்படையாகக் கூறவும் முடியவில்லை. சமீபத்தில் ஒரு தாய் என்னிடம் வந்து கதறினாள். அவளது டீன் ஏஜ் மகள் ஒருவனை இரண்டு வருடங்களுக்கு முன்பே பதிவுத் திருமணம் செய்து கொண்டு, அந்த விஷயமே வீட்டுக்குத் தெரியாமல் பார்த்துக் கொண்டிருக்கிறாள். வேறு ஒரு இடத்தில் நிச்சயதார்த்தம் செய்ய முயற்சிக்கும் போதுதான் விஷயம் தெரிந்ததாம்.

உங்களுக்கான ஆலோசனை இதுதான். வார்த்தைகளைக் கொட்டுவதால் பலன் இருக்காது. "எவனோடு சுத்திட்டு வர்றே? கண்டவனோட பழகத்தான் காலேஜுக்கு அனுப்பினோமா?" என்பதுபோல் கேட்டால் நிலைமை விபரீதமாகும் - உங்கள் மகள் அப்பாவியாக இருந்தாலும் சரி, உங்களுக்குத் தெரியாமல் வேறு காரியங்களில் ஈடுபட்டிருந்தாலும் சரி. இப்போதைய நிலையில் பொறுமையுடன், நிதானமாகத்தான் பிரச்னையை அணுக வேண்டும்.

இதுபோன்ற பிரச்னைகள் ஏற்படாமல் தவிர்ப்பதுதான் புத்திசாலித்தனம். அதற்கு ஒரு வழி இருக்கிறது. எந்தத் தாயுமே தன் மகளிடம் சிறுவயதிலிருந்தே நட்பை வளர்த்துக் கொள்ள வேண்டும். 'எது நடந்தாலும், எதை நினைத்தாலும் அதை அம்மாவிடம் பகிர்ந்து கொள்ளலாம்' என்கிற நம்பிக்கை மகளுக்கு வர வேண்டும். மகளுக்கு பத்து அல்லது பதினொரு வயது ஆகும்போதே 'ஆண்களிடம் அவளுக்கு ஈர்ப்பு ஏற்படுவது இயல்புதான்' என்பதைக் கூறலாம். அவள் தனக்கு ஒரு குறிப்பிட்ட ஹீரோ பிடிக்கும் என்றாலே, அவளைக் கேவலமாகப் பார்க்கக் கூடாது. தினமும் கொஞ்ச நேரமாவது அவளோடு மனம்விட்டுப் பேசும் பழக்கத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். ●




**மருத்துவம், மனநலம், அழகு, சமூகம், அந்தரங்கம் சம்பந்தப்பட்ட உங்கள் சந்தேகங்களை 'பாலி க்ளினிக்' என்று குறிப்பிட்டு அஞ்சல் அட்டையில் மட்டுமே எழுதி அனுப்புங்க. நிபுணர்கள் பதில் அளிக்கிறார்கள்.**

# சின்னான் செய்திகள்



'முண்டா' - ஒரிசாவில் அடர்ந்த காட்டுப் பகுதியில இன்னமும் வேட்டையாடி, விளையாடித் திரியற பழங்குடி மக்கள். ஆனா அவங்க கலாசாரம், கொஞ்ச 'லொல்'வாச்சாரமா இருக்குதுடோய்! காட்டுக்குள்ள வேட்டைக்குப் போறப்ப, சின்னப் புள்ளைங்களை வனவிலங்குகள்கிட்டயிருந்து பாதுகாக்க வீட்டுல நாயைக் கட்டி வைக்கலாம். ஆனா நாயையே 'கட்டி வைக்கிறாங்க' இவங்க! இப்படித்தான் சமீபத்துல அஞ்சு வயசுப் பெண் குழந்தைக்கும், ஒரு நாய்க்கும் டும் டும் பண்ணியிருக்காங்க! ஏன் ஒரு சிங்கத்தை, புலியை வீட்டோட மாப்பிள்ளை ஆக்கிட்டா, ரொம்ப பாதுகாப்புல்ல! முடிஞ்சா இனிமே அப்படிப் பண்ணுங்க மக்கா!

"எனக்கு மட்டும் ஹிந்தி தெரிஞ்சிருந்தா ஐஸ்வர்யா ராய்கூட நடிச்சிருப்பேன்"னு நம்ம ராதாரவி போன வாரம் புலம்பியிருக்காரு. ஆஹா, ஐஸ்கூட நடிக்க வழி தெரிஞ்சுடுச்சு! 30நாட்கள்ல ஹிந்தி கத்துக்கிட்டு, பாலிவுட்ல ஐஸ்கூட நானும் வேஷம் கட்டப் போறேன். அப்படியே அரைகுறை - ஆங்கிலத்தை முழுசாப் படிச்சுட்டு, ஹாலிவுட்ல பிரிட்னி ஸ்பியர்ஸ்கூட கூத்து கட்டலாம்னு ஐடியா! ஐயோ... இந்த ஐடியா எனக்கு முன்னாடியே கிடைச்சிருந்தா, விவேக் ஒபராயை இந்த அளவுக்கு வளர விட்டிருக்க மாட்டேனே! மேரா தேரா ஹமாரா தேஷ்கா குச் நஹி!

'ரஜினியின் அடுத்த படத்தின் பெயர் என்ன?' (ஏ) ஜக்குபாய், (பி) சந்திரமுகி, (சி) ஜி, (டி) ஏதுமில்லை. - இது ஏதோ எஃப்.எம்.ரேடியோவில வந்த எஸ்.எம்.எஸ் கான்டெஸ்ட் கேள்வி இல்ல. சமீபத்துல நடந்த அகில இந்திய அளவில நடந்த, ரயில்வே சீனியர் பப்ளிசிட்டி இன்ஸ்பெக்டர் தேர்வில கேட்கப்பட்ட கேள்வி இது. கேள்வியைப் பார்த்த வட இந்தியக்காரர்கள் 'பப்பரப்பே'னு பதில் தெரியாம முழிச்சாங்களாம். ஒருவேளை ரயில்வே தேர்வுங்கிறதனால 'மும்பை எக்ஸ்பிரஸ்' பத்திக் கேட்டிருந்தா, பதில் தெரிஞ்சிருக்கலாம். என்ன நான் சொல்றது சரிதானே?

'இங்கிலீஷ்காரன்'னு ஒரு படத்துல நம்ம லொள்ளு சத்யராஜ் நடிக்கறாரு. எதுக்கு இப்போ, இங்க, இதைச் சொல்றேன்னு புரிய வேண்டியவங்களுக்குப் புரிஞ்சா சரிதான்!



# உங்க பிரைவசிக்கு!

### புதுசு

**பா**க்கெட்ல ஃப்ளாப்பியோட அலைஞ்சோம். அப்புறம் சி.டி.யோட அலைஞ்சோம். அப்புறம் மினி சி.டி.யோட அலைஞ்சோம். அப்புறம் மெமரி ஸ்டிக் வந்துச்சு. இப்போ பாக்கெட் சைஸ்ல ஹார்ட் டிஸ்க்கே வந்துடுச்சு. 'சிகேட்' இந்த யு.எஸ்.பி. 2.0 பாக்கெட் ஹார்ட் டிரைவ்-ஐ அறிமுகப் படுத்தியிருக்காங்க. கைக்கு அடக்கமா இருந்தாலும், இதோட கொள்ளளவு 5 GB (2.5 GBயிலும் வந்திருக்கு). USB போர்ட்டை சொருகினோமா, டேட்டாவை உருவினோமான்னு போய்க்கிட்டே இருக்கலாம். ஒரு வருட வாரண்டியோட, ஆன்லைன்ல இப்போ வாங்கலாம். இன்னும் தெரிஞ்சுக்க Seagate.com போங்க.




### தமிழ்

"**ம**யக்கும் மாலை பொழுதே நீ போ, போ!"

இனிக்கும் இன்ப இரவே நீ வா, வா!" - மயக்குகின்ற வரிகளுக்கு சொந்தக்காரர் யாரென்று உங்களுக்குத் தெரியாமல் இருக்காது. "சினிமா உலகிலும், அரசியல் உலகிலும், பத்திரிகையுலகிலும் எனக்கிருந்த மாயையை நீக்கிய மகத்தான ஒளிக் கீற்றுக்குப் பெயர்தான் விந்தன்" - என்கிறார் இவரைப் பற்றி ஜெயகாந்தன். "வீதியில் கொஞ்ச தூரம் நடந்து போனால், பல தரப்பட்ட மனிதர்களைச் சந்திக்க நேரும். அப்போதே என்னுள் ஒரு கதை உருவாகிவிடும்!" என்றவர் விந்தன். "விந்தன் கதைகளைப் படிப்பதென்றால் எனக்கு எப்போதும் மனதிலே பயம்




### டௌன்லோட் :

**ரொ**ம்ப ரொம்ப முக்கியமான விஷயங்களை ஒரு Folder-ல எடுத்து வைச்சிருக்கீங்க. ஆனா அதை எப்படிப் பாதுகாக்கறதுன்னு தெரியாம, தவிச்சுக்கிட்டு இருக்கீங்களா? www.handyarchieve.com/download/5462/lockfolder.exe. இதுதான் Lock Folder சாப்ஃட்வேர் இலவசமாக கிடைக்கிற லிங்க். டௌன்லோட் பண்ணி, உங்க பெர்சனல் Folderக்கு அழகா பாஸ்வேர்ட் கொடுத்து பாதுகாப்பா வைச்சுக்கோங்க. (பாஸ் வேர்டை மறந்து போற கேஸா நீங்க? பேசாம பாஸ்வேர்டை

உண்டாகும். படித்தால் மனதிலே என்னென்ன விதமான சங்கடங்கள் உண்டாகுமோ, எப்படிப் பட்ட வேதனைகளுக்கு ஆளாக நேருமோ என்று தான் பயம்!'' - சொன்னவர் கல்கி.



காகித வயலை உழுத விந்தனை தற்போது வலைப் பதிவுகளில் காண முடிகிறது. (www.vindhan.org) விந்தன் பற்றி பல்வேறு எழுத்தாளர்கள், கவிஞர்கள் கூறிய விமர்சனங்கள் காணக்கிடைக்கின்றன. விந்தனின் படைப்புகளையும் வலைப் பதிவுகளாக்கிக் கொடுத்தால், தளம் மேலும் மிளிரும்.

- ப்ரௌஸர்

password-னே செட் பண்ணிக்கோங்க. மறக்கவே மறக்காது)

### தகவல்

உலக வரைபடத்தை கண்டங்கள் வாரியாக, பெருங்கடல்கள் வாரியாக, கிரீன்விச் நேரம் வாரியாக என பல வகைகளில் வாரிக் கொடுக்கும் தளம் worldatlas.com சுனாமிக்குப் பின் உலக வரைபடத்தில் ஏற்பட்ட மாறுதல்கள் இங்கே காணக்கிடைக்கின்றன. நதிகள், தீவுகள், மலைகள் என பலவற்றை அடிப்படையாகக் கொண்டு, வரைபடங்கள் கிடைக்கின்றன. மாணவர்கள் மற்றும் போட்டித் தேர்வுகளுக்குத் தயார் செய்பவர்கள் நிச்சயம் இத்தளத்தை மொய்க்கலாம்.



சாய்பிரஷாந்த் - இன்றைக்கு சின்னத் திரையில் பிஸியாக வலம் வந்து கொண்டிருக்கும் இளம் நடிகர். 'வீட்டுக்கு வீடு லூட்டி'யில் காமெடி கேரக்டர், 'நிம்மதி'யில் நெகட்டிவ் கேரக்டர், 'கிருஷ்ணா காட்டேஜில்' அலி கேரக்டர் என்று தொடர்ந்து வித்தியாசமான ரோல்களில் அசத்திக் கொண்டிருக்கிறார்.

''அண்ணாமலை, செல்வின்னு உன்னோட இமேஜ் உயர்ந்துகிட்டே



## குட்டீஸுக்குப் பிடிச்ச கேரக்டர்!

இருக்கறப்போ 'அலி' கேரக்டர் உன் இமேஜைக் கெடுத்து விடும்னு, பல பேர் பயமுறுத்தினாங்க. சரி, ரிஸ்க் எடுக்கலாம்னு முடிவு பண்ணினேன். இன்னிக்கு நல்ல பலன் கிடைச்சிருக்கு. குறிப்பா குட்டீஸ் மத்தியில நல்ல வரவேற்பு கிடைச்சிருக்கு.'' என்று சொல்லும் சாய் பிரஷாந்த் தன்னுடைய பெயரை 'ஜெய் ஷக்தி' என்று மாற்றியிருக்கிறார். (நியூமலராலஜி படுத்திய பாடோ!)

- முத்து

"விரைவில் வல்லரசாகும் வாய்ப்பு இந்தியாவுக்குத்தான் அதிகம் உள்ளது. காரணம், இந்தியர்களுக்கு ஆங்கிலம் நன்றாகவே தெரியும். மாணவர்கள் ஆங்கிலம் படிக்கவில்லை என்றால் முன்னேற முடியாது. ஆனால் தற்போது சிலர் 'ஆங்கிலம் படிக்கக்கூடாது; தமிழை வளர்க்க வேண்டும். தமிழ் பேச வேண்டும்' எனக் கூறிக் கொண்டுள்ளனர். நாம் முன்னேற முடியாததற்கு அரசியல்தான் காரணம்"

- இப்படி தமிழ் பாதுகாப்பு இயக்கத்தின்மீது மறைமுகத் தாக்குதல் நடத்தியிருக்கிறார், மத்திய இணை அமைச்சர் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன். இந்த திடீர்த் தாக்குதலுக்கு தமிழ்ப் பாதுகாப்பு இயக்கத்தின் ரியாக்ஷனைத் தெரிந்து கொள்ள, அதன் முக்கிய நிர்வாகிகள் மூவரைச் சந்தித்தோம்.

**தொல். திருமாவளவன்:** *(தலைவர் - தமிழ் பாதுகாப்பு இயக்கம்)* : "தமிழ் பாதுகாப்பு இயக்கம் என்றைக்குமே ஆங்கிலம் படிக்காதே, இந்தி பேசாதே என்று சொன்னதில்லை. மாறாக அன்னைத் தமிழைப் பாதுகாப்போம். அதேசமயம், அனைத்து மொழிகளுக்கும் உரிய மதிப்பினைக் கொடுப்போம், அறிவுச் செல்வத்தைப் பெற தேவைப்படுகின்ற மொழிகளைக் கற்றுக் கொள்வோம் என்றுதான் சொல்லி வருகிறது. வல்லரசு நாடாவதையும், தமிழில் படிப்பதையும் சம்பந்தப்படுத்திப் பேசுவதே தவறு. இந்தியாவை வல்லரசு நாடாக்க விரும்புபவர்கள் பொருளாதார ரீதியாகவும், ராணுவ ரீதியாகவும் வல்லரசாக்கட்டும். அடுத்து வேலை வாய்ப்பைப் பற்றிக் கேட்கிறார்கள். தமிழ் படித்தவனுக்கு வேலை வாய்ப்பில் முன்னுரிமை என்று அரசு அறிவிக்கும் பட்சத்தில், வேலை வாய்ப்பு பிரச்னை எளிதில் தீர்ந்து விடும். ஆனால் தமிழனின் துரதிருஷ்டம், தற்போது உண்மையான தமிழுணர்வாளர்கள் கையில் ஆட்சி இல்லை. தமிழ் பாதுகாப்புக்காக முயற்சி மேற்கொண்டிருக்கும் ஒரு தமிழனுக்கு, அதே தமிழ்



# "இளங்கோவன் பேச்சு... தமிழனின் சாபக்கேடு..."

"வர மறுக்கும் மொழிக்காக ஏங்குவதை விடுத்து, எளிதில் நாவில் தவழக்கூடிய தமிழில் பேசுங்கள்"

நாட்டில் இருக்கும் தமிழன் இது போன்ற எதிர்ப்புக் கருத்துக்களைத் தெரிவிப்பது நம் தமிழனுக்கு இயற்கை கொடுத்த சாபக் கேடும். ஆனாலும் இத்தகைய கருத்துகளால் தமிழ் பாது காப்பு இயக்கம் அஞ்சாது, சோர்வடையாது. - பின்வாங் காது - தொடர்ந்து தன் பணியைச் செய்யும்!"



**ஜி.கே. மணி** *(பா.ம.க. தலைவர்)* : "நம் தாய் மொழியான தமிழைப் படிக் காமலேயே, அவரவர் விரும்பிய ஏனைய மொழிகளைப் படித்துப் பட்டம் பெற முடியும் என்ற அவலநிலை, தமிழ்நாட் டில் மட்டும்தான் உள்ளது. தமிழ் மொழி யைக் கட்டாயம் படியுங்கள், தேவைப் படுபவர்கள் ஆங்கிலத்தையும் படியுங்கள் என்பதுதான் எங்கள் கருத்து. நம்மில் எத்தனை பேருக்கு ஆங் கிலத்தில் சரளமாகப் பேச, எழுத முடியும்? வர மறுக் கும் மொழிக்காக ஏங்கு வதை விடுத்து, எளிதில் நாவில் தவழக்கூடிய தமிழில் பேசுங்கள், எழுதுங்கள் என் கிறோம். நாங்கள் இத் துணை முயற்சிகளையும் எடுப்பது அரசியல் ஆதாயத் துக்காக அல்ல. ஆகவே, எங் களுடைய முயற்சிக்கு அனைத்துக் கட்சி களும், அது ஆளும் கட்சியாக இருந்தா லும் சரி, எங்களுடைய கூட்டணிக் கட்சி யாக இருந்தாலும் சரி. ஆதரவு தர வேண்டும். இதில் கருத்து வேறு பாடு ஏற்படுவது தமிழுக்கு நல்லதல்ல!"



**டாக்டர் சேதுராமன்** *(தமிழ் பாதுகாப்பு இயக்கம்)* "தாய்மொழியிலேயே படித்து, புதிய புதிய கண்டு பிடிப்புகளைச் செய்து, முன்னேற்றம் கண்டு வரும் ஜப்பானை வைத்துக் கொண்டு, இப்படி கருத் துக் கூறுவது ஏற்புடையது தானா என்பதை சம்பந்தப் பட்டவர்கள் சிந்திக்க வேண்டும். இப்படி ஏதேதோ காரணம் கூறி ஆங்கிலத் துக்கு ஊக்கம் கொடுத்த தால்தான் தமிழ் இன்றைக்கு நசிந்து கொண்டிருக்கிறது. இதைத் தடுக்கும் முயற்சி யில் நாம் ஈடுபட்டால் அர சியல் தலையீடு என்கிறார்கள். தமிழைப் படி - எழுது - நேசி - காப்பாற்று என் றெல்லாம் பள்ளித் தமிழாசிரியர்கள் நான்கு பேர் மேடை போட்டுச் சொன் னால், யாராவது கேட்பார்களா? ஆனால் அரசியல் பின்புலம் கொண்ட நாங்கள் சொல் லும்போது அது எடுபட வாய்ப்புகள் அதிகம். இப் போது ஆங்கிலத்தில் படி என்கிறார்களே, அவர் களுக்கு ஓர் எச்சரிக்கை விடுக்கிறேன். தாய்மொழி யைத் தவிர -மற்ற மொழி களில் படிக்கும்போது, மனி தனின் புரிந்து கொள்ளும் தன்மை மங்கி விடுவதாக அறிவியல் ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இதன் விளைவாக ஆங்கிலத்தில் படிக்கும் தமிழன், இரண் டாம் தரக் குடிமகனாகி விடுவது நிச் சயம். இருந்தாலும் இளங்கோவன் சில கருத்துக்களைக் கூறியிருக்கிறார். எங் களுடைய கருத்துக்கு எல் லோருமே உடன்பட வேண்டிய அவசிய மில்லை. காலம் கனியும் போது புரிந்து கொண்டு செயல்படுவார் இளங்கோ வன் என்றே கருதுகிறேன்!"



**- முராரி**

படங்கள் : **ராஜன்**

மாத்தளை சோமு

# யாசகம்

உச்சி வானிலிருந்து மேற்கு நோக்கி சூரியன் வழக்கமாக நகரத் தொடங்கியும் வெயிலின் உக்கிரம் குறையவே இல்லை. ஆனாலும் அந்த வெயிலின் உஷ்ணத்தைத் தாங்கிக் கொண்டு வீட்டு வாசலின் முன்னே - நடைபாதை ஓரமாக வெறுந் தரையில் அம்மாசித் தாத்தா உட்கார்ந்து கொண்டு, குச்சியால் கோடு போட்டுக் கொண்டிருந்தார். அவர் அப்படிக் கோடு களைப் போடுகிறார் என்றால் இன்னும் சாப்பிடவில்லை என்றுதான் அர்த்தமாகும்.

காலையில் ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து விடும் அவர், இந்த நிமிடம் வரை பச்சைத் தண்ணீரை மட்டுமே ஆகார மாகக் குடித்துக் கொண்டிருக்கிறார். வாயில் போட்டு மெல்ல ஒரு பிடி அவல் கூட அவருக்குக் கிடைக்கவில்லை. மணி மூன்றுக்கு மேலாகிவிட்டது என்பதைச் சொல்வது போல், முருகவிலாஸ் பேருந்து திருச்சிப் பக்கம் போய்விட்டது. ஐந்து மணிக்குத்தான் சுடு சோறு கிடைக்கும். அது கூட எல்லோரும் சாப்பிட்டு மிச்ச மீதியை நாய்க்கு வைப்பது போல வரும். இது தினமும் நடக்கிற போராட்டம். அவர் தலை கீழே நின்றாலும் அதற்கு முன் எது வுமே வாயில் போட்டு மெல்லக் கிடைக் காது. ஐந்து மணிச் சோறு கூட மருமகள் நினைத்தால்தான். மகனே அவளிடம் அடி மையான பிறகு அவர் பேசத்தான் முடியுமா?

தன் ரத்தத்தில் பூத்த ஒரே ஒரு வாரிசு; கொள்ளி வைக்க வந்த மகன் எனப் பெருமையோடு இறுமாந்திருந்த அம்மாசித் தாத்தா, தன் மனைவி செத்த பிறகு 'மகனே எல்லாம்' என முடிவு கட்டி, சொத்தை மகன் பேருக்கு மாற்ற முனைந்தபோது, சாத்தன் கங்காணி எச்சரித்தார்.

"அம்மாசி! ஏமாந்துறாத... பசங்க பொண் டாட்டியக் கண்டதும் தலை குப்புற விழுந்



திருவானுக. எல்லாத்தயும் குடுத்திட்டு கஷ்டப்படாத... புடிய உன் கையில வைச்சிக்க... கடேசி வரைக்கும் உன் கையில புடி இருந்தாத்தான் காலத்த ஓட்ட முடியும்!"

"நாம பெத்த மவன நாமளே நம்பாம வேற யாரை நம்புறது? நடக்கிறது நடக்கட்டும்" என்று சுருக்கமாய் பதில் சொல்லிவிட்டு, ஒருநாள் சாத்தன் கங்காணியைக் கூட்டிக் கொண்டு போய் தன் பேரில் இருக்கிற சொத்தை எல்லாம் மகன் பேருக்கு மாற்றிவிட்டு வந்தார்.

மகனுக்கு சொத்து மாறிய நேரம் பேரன் பிறந்தான். அம்மாசித் தாத்தாவின் கால்கள் நிலத்தில் பதியவே இல்லை. பேரனின் 'முகம்' பார்த்ததிலேயே எல்லாவற்றையும் மறந்து போனார். பேரன் நடக்கத் தொடங்கியபோது, அம்மாசித் தாத்தாவின் வயிற்றில் அடி விழுந்தது. நேரத்துக்கு எதுவுமே கிடைக்கவில்லை. இன்று ஒருவேளை சோற்றுக்கே கை நீட்ட வேண்டியதாகிவிட்டது.

அம்மாசித் தாத்தாவின் வாழ்க்கைதான் அப்படி... அம்மாசியின் வாழ்க்கை அப்படியல்ல.... அம்மாசியாக இருந்தபோது, அந்தக் கிராமத்துக்கே அரசியல் அல்லாத மக்கள் தலைவராக இருந்தார். பஞ்சாயத்துத் தலைவர்கூட இவருக்குக் கீழேதான்... வீட்டை விட்டு வெள்ளை வேட்டியில் புறப்பட்டால், எதிர்ப்படும் எல்லோரும் கை குவித்துக் கும்பிடுவார்கள். வயல் தகராறில் இருந்து குடும்பத் தகராறு வரைக்கும் நியாயத் தராசாய் நிற்பார். குடும்பத் தகராறில் அறுத்து விடுவதை விட, சேர்த்தே வைப்பார். எந்த பந்தாவும் இல்லை. எளிமையை வலிமையாக்கி வாழ்ந்தவர், இன்று வேளாவேளை சோற்றுக்கு நீதி கேட்டு யாரிடம் பஞ்சாயத்துக்குப் போவார்?

மண்ணில் கோடுகளைப் போட்டு அம்மாசித் தாத்தா மௌனமாக யோசித்துக் கொண்டிருந்தபோது, எதிர் வீட்டு கமலம் வெளியே வந்து அவரையே பார்த்தாள்.

அம்மாசித் தாத்தாவோடு பேச நினைத்த கமலம் போன மாதம் நடந்த சம்பவத்தை நினைத்து விட்டு மௌனமாக உள்ளே போய்விட்டாள். அவள் கண்களில் இன்னமும் அந்தச் சம்பவம் நிழலாய் ஆடியது;

## நெகிழ்ச்சிக் கதை

"என்ன மாமா... நெலத்தில கோடு போடுறீங்க...? அப்படின்னா இன்னும் சாப்புடலியா? மணி மூணாச்சே!'' அவ்வளவுதான் கமலம் பேசினாள். அதற்குப் பதில் உள்ளேயிருந்து வெடித்தது.

"அவருக்குச் சோறு போட

லேனு குத்திக் காட்டுறியா...? அம்புட்டு வக்கணை கரிசனை இருந்தா, உன் வூட்டுக்குக் கூட்டிக் கிட்டு போயி சோறு போட வேண்டியதுதானே!''

அன்றிலிருந்து அம்மாசித் தாத்தா கோடு போடும்போது அவள் உதடுகள் பிரியாது; கண்களால் பேசுவதோடு சரி...

அம்மாசித் தாத்தாவுக்கு மயக்கம் வரும் போல் இருந்தது. நாக்கு வறண்டது. வயிற்றுக்குள் போராட்டம் தொடங்கியது. கடைசியாகச் சாப்பிட்டது நேற்று இரவு. காலையில் கொட்டிக்க எதுவும் கிடைக்கவில்லை. உப்புக்கரிக்கும் கிணற்றுத் தண்ணீர் வேண்டிய மட்டும் குடிக்கலாம். குடித்தார். வெறுந் தண்ணீரை எத்தனை தடவை குடிப்பது...? வயிறு குமட்டியது... வாந்தி வரும் போலிருந்தது.

அப்போது தூங்கி எழுந்த பேரன் வெளியே வந்தான்.

"வாடா... ஆனந்து..." என்றார் அம்மாசி மிக மெல்லிய குரலில். அவர் அருகில் வந்த ஆனந்து ''நீ தூங்கலியா தாத்தா...'' என்றான்.

''உன் அம்மா வந்ததில் இருந்து எனக்கு பகல் தூக்கமே இல்லையே!'' என்று மனசு நினைத்தாலும் அவரிடமிருந்து வெளியே வந்த வார்த்தைகள் வேறு...

"தூக்கம் வரலப்பா..."

"அப்ப நீ சாப்புடல... நல்லா சாப்பிட்டா தூக்கம் வரும்னு எங்க அம்மா சொல்லும்" என்று மழலை மொழியில் பேசினான் ஆனந்து. அவனுக்கு நாலு வயது முடிகிறது.

சுற்றும் முற்றும் பார்த்த அம்மாசித் தாத்தா பேரனைப் பக்கத்தில் வரச் சொல்லி அவன் காதில் மெதுவாகச் சொன்னார்... "ஆனந்து...! நா இன்னும் சாப்புடலப்பா... பசி வயித்தக் கிள்ளுது..."

''இந்த பிளாட்டு விலை அம்பதாயிரம்னு நேத்து சொல்லிட்டு இப்ப ஒரு லட்சம் கேட்கறீங்களே!''

''பக்கத்து பிளாட்டை நயன்தாரா நேத்து வாங்கிட்டாங்களே!''

- உ. ராஜாஜி



''ஏன் அம்மா சோறு தரலியா...?''

''அம்மா கூப்பிடல...'' என்று அம்மாசி சொன்னதும், அவரிடமிருந்து விடுபட்டு ஆனந்து உள்ளே ஓடினான். அவன் ஓடுகிற வேகத்தைப் பார்த்த அம்மாசி 'இன்னைக்கி சாப்பாடு கெடச்ச மாதிரிதான்' என்று நினைத்துக் கொண்டார்.

சில நிமிடங்களில் மகனோடு வெளியே வந்தாள் மருமகள். அம்மாசியை ஒரு பார்வை பார்த்தாள்.

"நா சாப்பாடு தரலேனு இவங்கிட்ட சொன்னீங்களாமே! இன்னைக்கி நா சமைக்கல்ல... முடியல... ராத்திரிதான் சோறு... இப்ப வேணும்னா சமைச்சி சாப்பிட்டுக்கலாம்!'' என்று வார்த்தைகளைக் கொட்டிவிட்டு, மகனை இழுத்துக் கொண்டு போனாள் மருமகள்.

இனி சாப்பாடு கிடைக்காது என்ற முடிவுக்கு வந்தார் அம்மாசி. மெதுவாக வயலை நோக்கி நடக்கத் தொடங்கினார்.

தூரத்தில் எவரோ வருவது புள்ளியாகத் தெரிந்தது. நேரம் ஆக ஆக புள்ளி மனிதனாகியது. உற்றுப் பார்த்தார் அம்மாசி. ஒற்றை மனிதன் வந்து கொண்டிருந்தான். மிக நெருக்கத்தில் அவன் யாரென்று தெரிந்தது. அது முடிவெட்டும் மாணிக்கம். இப்போதெல்லாம் அவன் முடிவெட்டுவதில்லை. அதற்குப் பதிலாக வீராணி ஐயனார் கோயிலில் நேர்த்திஆடு வெட்டுகிறான். ஆடு வெட்டினால் ஆட்டுத்தோல் கிடைக்கும். பணமும் கிடைக்கும். பூஜை முடிந்து எல்லோரும் சாப்பிட்ட பிறகு, கறிக்குழம்பு சோறு கிடைக்கும்.

மாணிக்கம் அருகில் வந்தான். அவன் கையில் சோற்றுப் பொட்டலம்...

"யாரு... மாணிக்கமா...?" என்று கேட்டார் அம்மாசித் தாத்தா.

"ஆமாங்க... அய்யனாரு கோயிலுக்குப் போயிட்டு வர்ரேங்க..."

கோயில் என்றால் கையில் இருப்பது சோற்றுப் பொட்டலம்தான்...

"கோயில்ல விசேசமா...?"

"ஆமாங்க... கெடா வெட்டு பூசை..."

"நல்ல கெடாவா...?"

"கெடா முரட்டுக் கெடா... எட்டு கிலோ வருமுங்க..."

"கூட்டம் குறைவுங்க... நான் சாப்புட்டு சோறு கறியோட வூட்டுக்குப் போறேங்க!"

அம்மாசித் தாத்தா எழுந்தார். நாக்கில் நீர் ஊறியது. கறி சாப்பிட்டு எத்தனையோ மாதம்..!

மாணிக்கத்தின் அருகே வந்தார் அம்மாசித் தாத்தா. சுற்றும் முற்றும் பார்த்தார். பிறகு சொன்னார்.

"மாணிக்கம் எனக்கு ஒரு உதவி செய்... ஒண்ணுமில்ல..." என்ற அவருக்கு வார்த்தைகள் வரவில்லை. தயக்கம். ஆனால் அந்த தயக்கத்தை பசி மயக்கம் வென்று...

"பசி தாங்க முடியல... மாணிக்கம்! வீட்டுல மருமக சோறு இல்லேனுட்டா... எனக்கு கறி சோறு போடுறியா?"

"அய்யா" என்று அதிர்ச்சியில் நின்ற மாணிக்கத்தை,

"யோசிக்காதே! போயி ஒரு வாழை எலை வெட்டிகிட்டு வந்து சோத்தப் போடு... போப்பா..." என்று விரட்டினார் அம்மாசித் தாத்தா.

ஒரு சிறிய இலையை அறுத்துக் கொண்டு வந்து அம்மாசித் தாத்தா முன் போட்டு, சோற்றுப் பொட்டலத்தில் இருந்த கறிச்சோற்றை அள்ளிப் போட்டான் மாணிக்கம். ஆட்டுக் கறியோடு சோறு... அம்மாசித் தாத்தா ஒரு புடி புடித்தார்... மாணிக்கம் யோசித்தான். 'பசி எதுவும் அறியாது' என்பார்களே அது... இதுதானா? அம்மாசித் தாத்தா யாரு? நான் யாரு? அவர் தலையை கொடுக்கிறவர். நான் முடி வெட்டுபவன்... அவர் வீட்டில் ராச்சோறு வாங்கித்தான் பழக்கம். இன்று அவருக்கே சோறு போட்டு புது சரித்திரத்தைப் படைத்து விட்டேனே!

அம்மாசித் தாத்தா சாப்பிட்டு முடித்தார்... மாணிக்கம் புறப்பட ஆயத்தமான போது, அம்மாசித் தாத்தா அவன் அருகே போய் மிக மெல்லிய குரலில் சொன்னார்....

"மாணிக்கம்! உங்கிட்ட சோறு வாங்கி சாப்பிட்டதை யாருகிட்டயும் சொல்லாதே... சரியா?"

அம்மாசித் தாத்தாவின் இரு கைகளும் குவிந்து நின்றன. இரு கைகளும் இணைந்ததால், எச்சில் கையிலிருந்த சோற்றுப் பருக்கை கீழே விழுந்தது. பதிலுக்கு எதுவும் பேசாத மாணிக்கம், சோற்றுப் பொட்டலத்தைக் கீழே வைத்துவிட்டு நடந்தான். ○

நம்பவே முடியவில்லை. பேபி கல்யாணியாக டி.வி. சீரியல்களில் வலம் வந்த இந்தப் பெண், இப்பொழுது 'விடலை' படத்தின் ஹீரோயின். "நடிப்பே என் உயிர் மூச்சு. என் பள்ளியில் என் ப்ரெண்ட்ஸ் எல்லாம் டாக்டர், இன்ஜினியர் என்று தன் கனவைக் கூறும்பொழுது நான் ஹீரோயின் என்றுதான் அடித்துச் சொல்வேன். கமல் மாதிரி சகல வித்தைகளிலும் அசத்துகிறேன் பாருங்கள்" என்று கலகலவெனச் சிரிக்கிறாள் கல்யாணி. 'விடலை'யில் இவருடன் ஜோடி சேர்வது பாண்டியராஜனின் மகன் ப்ருத்விராஜ்! ம்... செம ரகளைதான் போங்க!

- எழில்



# செம ரகளை!

# நந்தனாவும் நாயர் டீயும்!

இப்போது கோதாவுட்டாக காட்சியளிக்கிறது கோலிவுட்! உபயம்; மும்பை Vs மலையாள நாயகிகள். "சிம்ரன் அக்கா போட்டுக் கொடுத்த ரூட்ல ஜம்முன்னு வந்துக்கிட்டிருந்த எங்களைத் தொங்கல்லே விட்ட மலபார் பொண்ணுங்களை உண்டு



இல்லேன்னு பண்ணாம விட மாட்டோம்!" மும்பை வரவுகள் தம் பிடித்து இப்படிக் கொதிக்க, இன்னொரு பக்கம் மீரா ஜாஸ்மின், கோபிகா, நவ்யா நாயர், நயன்தாரா, இப்போது நந்தனா என அமைதியாக அசத்திக் கொண்டிருக்கிறார்கள் மலையாள வரவுகள்.

ஜூனியர் சிவாஜி துஷ்யந்த் அறிமுகமான 'சக்ஸஸ்' படத்தில் அவரது முறைப் பெண்ணாக வந்து அசத்திய நந்தனாவுக்குப் பூர்வீகம் கோழிக்கோடு. ஆனால் பிறந்து வளர்ந்ததெல்லாம் மும்பை.

"சின்ன வயதிலிருந்து சம்மர் கேம்ப் மட்டும் தான் கேரளத்துலே! வீட்லே அம்மா, அப்பா பேசறதுனாலே எனக்கும் மலையாளம் பேசத் தெரியும். ஆனால் எழுதப் படிக்கத் தெரியாது. இப்போ மலையாளம் மட்டுமில்லே, தமிழும் எழுதப் படிக்க கத்துக்கிட்டிருக்கேன்" எனும் நந்தனா, 'ஏ.பி.சி.டி', 'கலிங்கா', 'சாதுர்யம்', 'மனசுக்குத் தெரியும்', 'ஆயுள்' ஆகிய ஐந்து தமிழ்ப் படங்களில் பிஸி!

"அப்பா ஸ்ரீ கிரியேஷன்ஸ் என்ற விளம்பர

## மூடு! திற!

கேரள வாட் வரி விதிப்பை கண்டித்து 3 நாட்கள் தொடர் கடை அடைப்பு போராட்டங்கள் நடந்தன. இதனால் பொதுமக்கள் அடைந்த கஷ்ட நஷ்டங்கள் சொல்லி மாளாது. இதில் ஆத்திரமடைந்த கோழிக்கோட்டைச் சேர்ந்த பொதுமக்கள், நாலாவது நாள் வியாபாரிகள் கடை திறக்க வந்தபோது 'யாரும் கடை திறக்கக் கூடாது' என தடுத்து, தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தார்கள். 3 நாள் கடை அடைப்பு போராட்டத்தின்போது பொதுமக்கள் பட்ட அவஸ்தையைக் கண்டு சில வியாபாரிகள் மட்டும் 2ம் நாள் கடைகளைத் திறந்திருந்தார்கள். அவர்களை மட்டும் கடை திறந்து வியாபாரம் செய்ய அனுமதித்தார்கள். கடை அடைப்பை கண்டித்து கடை அடைப்பு செய்ய வைத்தது கண்டு சில வியாபாரிகள் போலீசுக்கு போனார்கள். போலீசார் வந்து பொதுமக்களிடம் சமரசம் பேசி மதியத்துக்கு மேல் கடையைத் திறக்க அனுமதித்தார்கள். கடை அடைப்பை கண்டித்து ஒரு கடை அடைப்பை பொதுமக்கள் வெற்றிகரமாக நடத்தி முடித்தது கேரளாவில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியிருக்கிறது.



- எஸ்.எஸ். மணி

நிறுவனத்தை மும்பையில் நடத்துகிறார். ஒருமுறை ஸ்டுடியோவில் புதிய மாடல்களுக்கு போட்டோ செஷன் நடந்துக்கிட்டு இருந்தது. நான் எதிர்பாராமல் அங்கே போனேன். மேக்-அப் எதுவும் இல்லாமலேயே போட்டோகிராபர் என்னை நிற்க வைத்து பிடிவாதமாக இரண்டு மூன்று படங்கள் எடுத்தார். படம் பிரிண்ட் போட்டு வந்ததும் எனக்கே ஆச்சரியம். அவ்ளோ போட்டோஜெனிக்காக இருந்தது! என்னோட படத்தைப் பார்த்த விளம்பர இயக்குனர்கள், கேரள நகைக் கடை விளம்பரங்களுக்கு மாடல் பண்ண முடியமான்னு கேட்டாங்க. அப்பா, அம்மா ஓ.கே சொன்னாங்க.... ஒத்துக்கிட்டேன்... விளம்பரங்களில் என்னைப் பார்த்துத் தான் மலையாள டைரக்டர் ஜோஸ்தாமஸ் நடிக்கக் கூப்பிட்டார். அங்கே 'சினேகிதன்' படத்தில் அறிமுகமாகி மூன்று படத்தில் நடிச்சு முடிச்சுட்டேன். அதுக்குள்ளே தமிழ்லேருந்து அழைப்பு. இப்போ மலையாள படத்துக்கு கால்ஷீட் தர முடியலே" எனும் நந்தனா, தனது ப்ளஸ் பாய்ண்ட் கண்கள் என்கிறார் அகல விரித்து.

"'ஏ.பி.சி.டி' படத்தில் என் கேரக்டர் பெயர் பாரதி. 'உனக்கெல்லாம் என்ன தெரியும்'னு எல்லோரும் கிண்டலாகப் பேசும் போது குடும்பத்துக்காக சின்ன வயசிலேயே பல தியாகங்கள் செய்து அசத்தும் கேரக்டர். 'அவள் ஒரு தொடர்கதை' சுஜாதா மாதிரி. 'ஏ.பி.சி.டி' பார்த்தால் நந்தனா ஒரு தொடர்கதைன்னு சொல்வீங்க. இது போல மனசுலே நிக்கிற கதாநாயகி கேரக்டர்லதான் நடிக்குறதுன்னு பிடிவாதமாக இருக்கிறேன்" என்றவரிடம் 'அதெப்படி தாய்மொழியைவிட தமிழ் மொழியில் நடிப்பதில் மலையாளப் பெண்களுக்கு அப்படியொரு ஆர்வம்?' என்றோம்.

"இங்கே நாயர் டீக்கடைக்குத்தானே மவுசு! அதே லாஜிக்தான்" என்று வாயடைக்கச் செய்தார்.

- ஸ்ரீசக்கரம்

படம்: சங்கர் சத்யமூர்த்தி

# பா.ம.க. வசையும் பார்த்திபன் வாழ்த்தும்...

**த**மிழ்ப் பாதுகாப்பு இயக்கம்
தமிழைக் காக்கும்
தமிழ்ப் பாதுகாப்பு இயக்கம்
தமிழை வளர்க்கும்
தமிழ்ப் பாதுகாப்பு இயக்கம்
தமிழ்ப் பகையைத் திருத்தும்

- இது சுமியோட ஸ்டேட்மெண்ட் இல்லீங்க... இயக்கத்துக்காரங்களோட முழக்கம். இவங்க இயக்கம் நடத்தட்டும்; வேண்டாங்கலை.. ஆனா தமிழ்ப் பகையைத் திருத்தறதுக்குப் பதிலா ஏன் பகையை மேலும் விசிறிவிடறாங்கன்னுதான் புரியலை. விகடன்ல இவங்க இயக்கத்தை விமர்சிச்சு தலையங்கம் எழுதிட்டதைத் தாங்கிக்க முடியாம விகடனோட 'தமிழ்க் கொலையை'க் கண்டிச்சு, முப்பத்திரண்டு பக்கத்துக்கு ஒரு வசையேடு அச்சிட்டு வெளியிட்டிருக்காங்க!

இன்னும் நம்ம சூப்பர் மார்க்கெட் பேர்ல அவங்களோட மூணாவது கண் பார்வை படலை. இல்லைன்னா சுமியை அட்டாக் பண்ணி 64 பக்கக் கையேடு போட்டிருப்பாங்க.

இயக்கத்துக்காரங்களுக்கும் சரி, பிற சுமி வெறுப்பாளர்களுக்கும் சரி... ஒரு விஷயத்தைத் தெரிவிச்சுக்க விரும்பறேன். மாகஸீன்ஸ்ல நடக்கிற தமிழ் - இங்க்லீஷ் கலப்புன்றது காலத்தைப் பிரதிபலிக்கிற ஒரு மொழி மாற்றம்தான். அதைக் கொஞ்சமோ நிறையவோ மிகைப்படுத்தி ஒரு பரபரப்பை கிரியேட் பண்ணிக்கிறாங்க பத்திரிகைக்காரங்க. (சுமி உள்பட) இதே பத்திரிகைகள்ல அனாவசிய இங்க்லீஷ் கலப்பில்லாத நல்ல தமிழ்ப் பகுதிகள் - சுலபமாகப் புரியற மாதிரியான பகுதிகள் - வரத்தான் வருது. அதே வாசகர்கள்தான் இரண்டையும் எஞ்சாய் பண்ணிப் படிக்கறாங்க. ஆயுத எழுத்தைப் பயன்படுத்தக் கூடாது, வடமொழி சொல் வரக்கூடாது, இங்க்லீஷ் யூஸ் பண்ணக் கூடாதுன்னெல்லாம் இன்னைக்குப் பத்திரிகைங்களோட மோதறது வேஸ்ட் கண்ணா வேஸ்ட்தான்!

இந்த மாதிரி வசையேடு வெளியிட்டுத் தமிழைப் பாதுகாக்க முடியும்னு நினைக்கறவங்களுக்கு, பார்த்திபனோட புது வருஷ வாழ்த்து ஏடைச் சுட்டிக் காட்ட






விரும்பறேன். ரொம்ப நூதனமான வாழ்த்து அவர் வருஷா வருஷம் அனுப்புவார். இந்த வருஷம் அது ரொம்ப ரொம்ப உபயோகமானதாவும் இருக்கு. 'யாகாவாராயினும்'... 'நாகாக்க'ன்னு வாழ்த்து அட்டையின் இரண்டு பக்கமும் பிரிச்சு தலைப்புப் போட்டு, 'ல', 'ள', 'ழ' வை எப்படி உச்சரிக்கணும்னு (நாக்கை மடிக்க வேண்டிய அளவு) டயாக்ரம் போட்டுக் காட்டி கச்சிதமா விளக்கியிருக்கார்.

'நம்மை நாமே திருத்திக் கொண்டு மற்றவர்களும் பேச பயிற்சி தருவோம்'னு அடக்கத்தோடு சொல்லியிருக்கார். இப்படிச் சொன்னா உச்சரிப்பும் திருந்தும் தமிழ்ப் பகையும் திருந்தும்... அதை விட்டுட்டு பா.ம.க. போற ரூட் சரியில்லீங்க!



**சுமி**

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# குறையொன்றுமில்லை

தேவகியின் கர்ப்பத்தில் தோன்றிய பரமாத்மா அந்த கர்ப்பத்தின் குணதோஷங்களின்றி கிருஷ்ணாவதார வைபவங்களை நிகழ்த்தினான். பல இடங்களில் விச்வரூபம் எடுத்து அனுக்ரஹம் பண்ணினான்.

கீதையிலே பரமாத்மா என்ன சொல்கிறான்...? "இப்படி விச்வரூபம் எடுத்தும் மூடர்கள் என் பெருமையை உணராமல் இருக்கிறார்களே..." என்றான். அதனால்தான், அந்த விச்வரூபத்தைக் கண்ட பீஷ்மாச்சார்யார் 'அவனை நன்கு உணருங்கள்' என்று வலியுறுத்தி, "பூதாத்மா, பரமாத்மா" என்று அவனை அழைக்கிறார்.

'பரமாத்மா' என்றால், அவனைக் காட்டிலும் மேம்பட்டவர்கள் இல்லை என்கிற பெருமையை உடையவன்.

பகவானுக்கு ஒருத்தர் அர்ச்சனை பண்ணிக் கொண்டே இருந்தார். நாமாவளி சொல்லிக் கொண்டே வருகிறபோது, "ஓம் தரித்ராய நம:" என்றார். பகவானுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. அவர் கையைப் பிடித்துக் கொண்டு விட்டான். அர்ச்சனைத் தட்டையும் பிடுங்கிக் கொண்டுவிட்டான் பகவான்.

அந்த மாதிரி நாம் அர்ச்சனை பண்ணினால், நம் கையையும் பிடித்துக் கொள்வானா என்று கொஞ்சம் யோசனை பண்ண வேண்டும்!

பகவான் அந்த பக்தனைப் பார்த்துக் கேட்கிறான்: "என்ன அக்கிரமம்! எல்லாரும் பூதாத்மா பரமாத்மாச முக்தானாம் பரமாகதி: என்று ஸ்தோத்திரம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்... நீ மட்டும் தரித்ராய நம:ன்னு அர்ச்சனை பண்ணுகிறாயே! நீர் பண்ணி விட்டுப் போய்விடுவீர்... அப்புறம்



பின்னால் வருபவர்கள் எல்லாம் கூட அப்படியே பண்ண ஆரம்பித்து விடுவார்களே. எனக்கு தாரித்ரியமே இல்லையே... தரித்ராய நம: என்று அர்ச்சனை பண்ணுவது என்ன புதுப் பழக்கம்...?''

''உமக்கு தாரித்ரியம் இருப்பதால்தான் பண்ணுகிறேன்'' என்றார் இவர்.

''எந்த விஷயத்திலே தாரித்ரியம்...? இருந்தால் நான் ஒப்புக் கொள்கிறேன்.''

''நிரூபிப்பேன்...''

''நிரூபியேன் பார்க்கலாம்...''

''உனக்குச் சமானமானவன் இருந்தால் காட்டு!'' என்றார் பூஜை பண்ணிக் கொண்டிருந்தவர்.

கேட்டால் எல்லாவற்றையும் காட்டக் கூடிய எம்பெருமானுக்கு, தனக்குத் துல்யம் என்று யாரைக் காட்ட முடியும்?..! அவனைப் போல் இன்னொருவன் இருந்தால்தானே காட்ட முடியும்! அதனால், ''இந்த விஷயத்



திலே உனக்குத் தாரித்ரியம் இருக்கா? இல்லையா? என்று அர்ச்சகர் கேட்க, ''இருக்கு'' என்று ஒப்புக் கொண்டு விட்டான் பகவான்.

"உனக்கு அதிகம் எது...?" என்றார் இவர்...

"இந்த விஷயத்திலேயும் தாரித்ரியம் உண்டு'' என்று சொல்லிவிட்டான் பகவான்.

அப்படியானால் இரண்டு விஷயங்களில் பகவானுக்கு தாரித்ரியம். அவனுக்குச் சமானமானவர்களையும் காட்ட முடிவதில்லை; அவனுக்கு அதிகமானவரும் இல்லை. இந்த இரண்டு விஷயமும் தாரித்ரியம்தானே! எனினும் எம்பெருமானுக்கு ஒரு பெருமை இதனாலே.

ஒத்தாரும் மிக்காரும் இலையாய மாயியன் என்பதால் பரமாத்மா அவன்!

முக்தானாம் பரமா கதி:

முக்தர்களால் அடையப்படவேண்டிய உத்தமமான ஸ்தானமாக விளங்கக் கூடியவன். ஆகையினால், அடைய வேண்டிய பரம்பொருள் அவன்தான்.

பிராத்யம் - பிராபகம் என்று சொல்வார்கள். பிராத்யம் என்றால், எதை நாம் அடையவேண்டுமோ அது பிராத்யம். பிராபகம் என்றால் அடைவிக்கும்படியான சாதனம். எம்பெருமானை நாம் அடையவேண்டும்.

முக்தாத்மாக்களெல்லாம் பகவானை அடைந்து அனுபவிக்கிறார்கள். முக்தாத்மாக்களுக்கு அடையும் ஸ்தானமாக இருக்கக் கூடியவன் அவன்.

'முக்தி அடைவது' என்றால் என்ன..?

'பக்தான்' என்று பெயர் நமக்கு. நித்ய சம்சாரிகளாக இந்த உலகிலே பிறவி அடைந்து பார்த்துக் கொண்டேயிருக்கக் கூடிய நமக்கெல்லாம், பக்தான் என்று பெயர். இங்கே கட்டுப்பட்டு, சரீரத்துக்குள் அடைபட்டு நாம் இருந்து கொண்டிருக்கிறோம்.

இதிலிருந்து விடுபட்டு மோக்ஷத்தை அடையக்கூடிய முக்தாத்மாக்கள் இருக்கிறார்களே, அவர்களுக்கு 'உத்' என்று பெயர்... சம்ஸார சம்பந்தம் இல்லாமல், பிறவி இல்லாமல், நித்ய கைங்கர்யம் பண்ணிக் கொண்டே இருக்கிறார்களே, அவர்களுக்கு நித்யசூரிகள் என்று பெயர்.

பகவானை இமை கொட்டுதல்

## வயசு!

ஊர்க் கதை
உறவுக் கதை பேசியபடி
சவரம் செய்யும்
தொழிலாளியின் கத்தி
கன்னத்தில் இருக்கும்போதே...
காயம்பட்டாலும்
பரவாயில்லையென
திரும்பிப் பார்க்கத்தோணும்
சலூன் கடையைக் கடக்கும்
கொலுசு சப்தம்
யாருடையது என்று?

– 'பிரஸ்' மூர்த்தி, ராதாபுரம்

இல்லாமல் நித்யம் ஸேவித்துக் கொண்டிருக்கக் கூடிய நித்யசூரிகள், அனந்தன், கருடன், விஷ்வக்ஸேனன் ஆகியோர் என்று சொல்வார்கள்.

அனந்தன் - ஆதிசேஷன்

கருடன் - பக்ஷிராஜன் என்கிற கருடத்மான்

விஷ்வக்ஸேனன் - ஸேனை நாயகர்

நித்யசூரிகளுக்கு உத்தராள் என்று பெயர். முக்தாத்மாக்களுக்கு 'உத்' என்று பெயர். இதைக் காட்டிலும் மேலே, இவர்கள் இரண்டு பேரையும் அனுக்கிரஹிக்கும்படியான உயர்ந்தவனான பரமாத்மாவுக்கு, உத்தமன் என்று பெயர். உது, உத்தர: உத்தம: உத்தமன் என்று பகவானுக்கு மட்டுமே பெயர். ஸ்ரீரங்கத்துக்குப் பக்கத்தில் உத்தமர் கோயில் என்றே இருக்கிறது. உத்தமன் என்று எம்பெருமான் திருநாமம். 'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்' என்று ஆண்டாள் கொண்டாடுகிறாள்.

எல்லாவற்றையும் அவன் தாங்குகிறான்; எல்லா சராசரங்களிலேயும் அவன் உறைகிறான்; அவன் உத்தமன் பரமாத்மா.

முக்தாத்மாக்களால் வைகுண்டத்தில் ஆராதிக்கப்படுகிறான். அந்தக் கைங்கர்யத்தால் பரமானந்தம் அடைகிறான். நித்யசூரி கோஷ்டிகளிடையே சென்று இங்கே இருக்கின்ற ஜீவாத்மாக்கள் அவ்வளவு பேரும் உயர்ந்து சேவிக்கும்படியாக அவன் இருக்கிறான். அந்த முக்தியை அடைந்து, அந்த பகவானை அடைய நாம் கொடுத்து வைத்துள்



ளோம் என்பதை சஹஸ்ரநாமம் நமக்குக் காட்டுகிறது.

வைகுண்டத்துக்குச் சென்றால், எம்பெருமானை அடைந்து, பரமபுருஷார்த்தம் எய்தலாம். அந்த புருஷார்த்தத்தை அடைவதற்காகவேதான் நாம் இந்த லோகத்திலே வாழ வேண்டும். எப்போது பகவான் நம்மை கிட்டே கூட்டிக் கொண்டு, திவ்யமான தனது சரணார விந்தத்தைக் காட்டுகிறானோ அப்போது நமது பிறவியின் பயன் முழுமையாகிறது.

ஆகவே, அந்த வைகுண்டத்திலே பகவான் நமக்கு சர்வ வித பந்துவாக எப்போது ஆவான் என்று சாதக பக்ஷியைப் போல், அந்த நாளை நாம் எதிர்நோக்கி இருக்க வேண்டும். அங்கு போன பிற்பாடு இன்னொன்று நினைப்பதோ, மற்றொன்று செய்வதோ, ஸ்மரிப்பதோ முடியாது. அந்த எம்பெருமானுடைய திவ்ய வடிவழகைப் பார்த்த பிற்பாடு, அந்த சரணாரவிந்தத்திலேயே ஈடுபடும்படியான ஒரு நிலை.

ஆகையினாலே, முக்தாத்மாக்களால் அனுபவிக்கும்படியான உயர்ந்த நிலையிலே பரமாத்மா விளங்குகிறான். வேதத்தில் சொல்கிறபோது, 'அந்த எம்பெருமானை அனுபவித்தால்தான் சாயுஜ்யம்' என்று சொல்லப்படுகிறது.

முக்தாத்மாக்கள் அனுபவிக்கும்படியான சாயுஜ்யத்தைதான் 'முக்தானாம் பரமாகதி': என்றது. வைகுண்டத்துக்குச் சென்று அவனை அடைகிறோம். - முக்தி நிலை -

முக்தியை அடைவது என்றால் என்ன...? வைகுண்டம் எங்கே இருக்கிறது? என்று கேட்டால், எல்லோரும் உடனே ஊர்த்துவமுகமாகக் கையைக் காட்டுவார்கள். உடனே அடுத்த கேள்வி... 'மேலே கையைக் காட்டி விட்டால் ஆயிற்றா... அது எவ்வளவு தூரம்?' என்ற கேள்வி!

'ஸ்ரீரங்கம் எவ்வளவு தூரம்?' என்று கேட்டால் சொல்லலாம். 'காஞ்சிபுரம் எத்தனை தூரம்?' என்று கேட்டால் சொல்லலாம்... 'வைகுண்டம் எங்கே இருக்கிறது..?' என்று கேட்டால் தூரத்தை எப்படிச் சொல்ல முடியும்!

கண்ணுக்குத் தெரியாத விஷயத்தை, வேதத்தைக் கொண்டுதான் தெரிந்து கொள்ள வேண்டும்.

கௌசிதகி உபநிஷத் என்கிற உபநிஷத்தானது, வைகுண்டத்துக்கும் நமக்கும் இருக்கும்படியான தூரத்தைக் கணக்கிட்டுச் சொல்கிறது. சுவாமி தேசிகன், அந்த உபநிஷத்தின் ஸாரமான விஷயத்தை, பரமபத ஸோபானம் என்கிற ரஹஸ்யத்தை அழகாக எடுத்துக் காட்டுகிறார், நம்முடைய மனசிலே பதிவதற்காக:

வைகுண்டம் மேலே; நாம் கீழே... வைகுண்டத்துக்கு நாம் போகவேண்டும் என்றால் படிக்கட்டுகள் ஏற வேண்டும். ஒரு வீடு கட்டுகிறோம்... மேல் தளத்துக்குப் போக வேண்டுமானால் படிக்கட்டுகளை ஏற வேண்டும். கீழேயிருந்து மேலே போவதற்குப் படிக்கட்டுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. சில இடங்களில் 24, சில இடங்களில் 32, இன்னும் சில இடங்களில் 99... இப்படிப் படிக்கட்டுகள்.

அப்படியானால், பகவான் வைகுண்டத்திலே இருக்கிறானே, அவனை அடைவதற்கு எத்தனை படிக்கட்டுகள் இருக்கும்...? வைகுண்டம் ரொம்ப தூரத்தில் அல்லவா இருக்கிறது?!

(வளரும்)

அன்று...

அவள் பெயர் முன்னி. காஷ்மீர் பத்தான்கோட்டின் அபார்ட்மெண்ட் ஒன்றில் வாழ்ந்த குட்டி தேவதை. தன் ஒரு வயதுத் தம்பியை தொட்டில் அமைத்து முதுகில் கட்டிக்கொண்டு, வீட்டைக் கட்டிக் காத்த காவல் தெய்வம். படிக்காமல் ஊர் சுற்றுகிறேனென்று, ஐந்தாம் வகுப்பு முடிந்ததும் சித்தப்பா வீட்டுக்கு நான் பார்சல் செய்யப் பட்டபோது, எனக்கு ஆறுதல் வரமளித்த கடவுள். என் வயது பத்து. அவளுக்கு எட்டு. காலையில் எழுந்தது முதல் தூங்குவது வரை, முன்னிக்கு சதா வேலைதான். அம்மா, அப்பா இருவருமே பணிக்குச் செல்பவர்கள். தனது தம்பியை பொத்திப் பொத்தி பாதுகாப்பதில் துவங்கி, சமையல் முதல் சகலமும் முன்னிதான். ஊர் விட்டு ஊர் வந்த என்னைப் பரிவோடு பார்த்த அந்தப் பக்கத்து வீட்டுக் குயிலிடம் என்னையறியாமலேயே என் நெஞ்சம் இடம் பெயர்ந்தது. விவரிக்க இயலா நேசமொன்று, உருகி உருகி எங்களை வார்த்தெடுத்தது. நேரம் கிடைக்கும்போதெல்லாம் சைகையாலேயே பாசத்தைப் பகிர்ந்து கொள்வோம். தன் பெற்றோரால் உண்டான அவளின் காயங்களுக்கு என் கண்ணீரால் மருந்து தடவுவேன். என் வெறுமையைத் தனது சிரிப்பால் மறக்கச் செய்வாள். தூரத்து மலை முகடுகள், வெட்ட வெளிகள், கட்டடங்கள், காடு தேசங்கள் என்று எங்களின் பாதங்கள் பதியாத இடங்களே இல்லையென்றாக்கினோம்.

ஓவியர் ஷ்யாம்

காதல் சிறகுகள் 2

நான் அவள் மேல் கொண்டது காதலுமல்ல... அவளுக்கு என் மீது பிறந்தது இனக் கவர்ச்சியுமல்ல. அந்த உணர்வு எல்லாவற்றையும் கடந்ததாக இருந்தது. இந்தி தெரியவில்லையே என்று நான் கவலைப்பட்டதில்லை. தமிழ் புரியவில்லையே என்று அவள் வருத்தப்பட்டதில்லை. எங்களுக்கு மட்டுமே புரியக்கூடிய புதுமொழி ஒன்றை உருவாக்கினோம். அதன் மூலம் நாங்கள் பகிர்ந்துகொண்ட சந்தோஷங்கள்தான் எத்தனை எத்தனை...!

விடியல் இருந்தால் அஸ்தமனம் இருக்குமே... ஒன்றரை வருடங்கள் தொடர்ந்த எங்கள் நட்புக்கு முடிவு நாள் வந்தது. சித்தப்பா என்னை ராஜபாளையத்துக்கே திருப்பியனுப்பினார். துணி மூட்டையை எடுத்துக் கொண்டு ஒவ்வொருவரிடமும் நான் கையாட்டி விடைபெற்றேன். முன்னியின் அப்பா... அம்மா... குட்டிப் பாப்பா.... முன்னி... ம்ஹூம்... என்னால் அவள் முன் நிற்கத் திராணியில்லை. கால்கள் பின்னிக் கொண்டன.... கைகள் நடுங்க ஆரம்பித்து விட்டன... முகத்தை நேர்கொண்டு பார்க்க முடியவில்லை.... கடகடவென கண்ணீர் சுரக்க ஆரம்பித்து விட்டது... எதுவுமே சொல்லாமல் அமைதியாக வெறித்த அவளின் அந்த மௌனம்தான் என்னை அதிகம் சுட்டது. அவள் கைகளை வருடி, கோத்து, "வ...ரு...கி...றே...ன்..." என்று எழுத்து எழுத்தாக உதிர்த்துவிட்டு நகருகிறேன்... மாடியிறங்கி தரைக்கு வந்து, திரும்பிப் பாராது போகிறேன்... தெருமுனையைக் கடக்கும்

# தே வ தை

முன் ஒரு உந்துதல்... என்னையே ஜோடிக் கண்கள் ஊடுருவும் உணர்வு... எனக்குத் தெரியும் அது அவளின் கண்கள்தானென்று... உறுதியாக நெஞ்சை இறுக்கி நடக்கிறேன்... என்னால் இயலவில்லை... ஒரு கட்டத்திற்கு மேல் முடியாமல் தொய்வடைந்து போய் திரும்பிப் பார்க்க... அந்த... அந்தப் பார்வைக்காகவே காத்திருந்தது போல் ஓடோடி வருகிறாள் முன்னி... என்னிடமும் வேகம் வந்துவிட, ஊடகங்களின் காதலர்கள் போல் இருவரும் பாய்ந்து வந்தோம். எந்தவிதக் கிளர்ச்சியுமில்லாத மலர்ச்சியான பாய்ச்சல். நட்பைப் பிரியும், நட்பின் வேதனைத் தகிப்பு.

''தோஸ்த்'' என்று கதறுகிறாள் முன்னி. 'இன்னும் கொஞ்ச நேரம்'

'இன்னும் கொஞ்ச நேரம்' என்று நாங்கள் அலற அலற, வலுக்கட்டாயமாகப் பிரிக்கப் படுகிறோம். துடைக்கத் தோன்றாது கண்ணீ

ரோடு ஓடுகிறேன்...

"முன்னீ...னீ...னீ..."

நேற்று...

அவன் பெயர் பூமா. சென்னைக் கடற்கரை

யோர குடியிருப்பு ஒன்றின் மகாராணி. அம்மா - அப்பா வெளிநாட்டில். பாட்டி துணையுடன் இங்கே கம்ப்யூட்டர் + நடனம் கற்று வந்தாள். என் நண்பன் ஒருவன் மூலம் அறிமுகமானவள் கேட்ட முதல் கேள்வி...

"என்னை படம் வரைகிறாயா?"

"ம்..."

"எங்கே வரைஞ்சு காட்டேன்..."

"எங்கே...?"

"இங்கே" என்று கையை நீட்டினாள்.

வரைந்தேன். அச்சாக அவள் போல் இல்லையென்றாலும், அசலாக அவள் போல்தான் இருந்தது.

மூன்றாம் நாள் மாலை சந்தித்தபோது...

"ஷ்யாம், ரொம்பக் கஷ்டமா இருக்கு?"

"எதுக்கு?"

"ஒத்தக் கைல எல்லாத்தையும் பண்றதுக்கு."

"ஏன் ஒத்தக் கை?"

"நீ வரைஞ்ச படத்த அழிக்க மனசு வரல."

"அதனால?"

"மூணு நாளா அந்தக் கையால எதையுமே பண்ணல. பாட்டிதான் எல்லாத்துக்கும்."

என் தலை கோதி சிரித்தாள். பார்த்துக் கொண்டே இருக்கலாம் போல் தோன்றியது.

பார்த்துக் கொண்டேதான் இருந்தேன்... ஒருநாள், இரண்டு நாள் அல்ல... ஒரு வருடம்...

"இன்னும் எத்தனை நாளைக்குத்தான் இப்படியே பார்த்துட்டிருக்கப் போற ஷ்யாம்?"

"ஆயுசுக்கும்..."

"பார்த்தா போதுமா?"

"எனக்குப் போதும்"

"எனக்குப் போறாதே..."

"என்ன பண்ணச் சொல்ற?"

"எங்கம்மா - அப்பாட்ட வந்து பொண்ணு கேளு"

"அமெரிக்காவுக்கா...?"

"நான் கூட்டிட்டுப் போறேன்"

"அதெல்லாம் வேணாம்... அவங்க இங்க வரும்போது பேசலாம்"

"ஏன் வரும்போது? நான் போய் பர்மிஷன் வாங்கிட்டு வர்றேன்"

மிக மிக சந்தோஷமாகச் சென்றாள். விமான நிலையத்தில் என் புறங்கையில் முத்தமிட்டு 'வரும் வரை ஞாபகத்திற்கு' என்றாள்.

நாட்கள் கடந்தன. பூமா வரவே இல்லை. ஒருநாள் பூமா அனுப்பிய அழைப்பிதழ் வந்தது. திருமண அழைப்பிதழ்!

## இன்று...

அவள் பெயர் ரூபா. மும்பைக்குச் சென்றபோது பழக்கமானவள். ஒரே வாரத்தில் ஒருத்தி இத்தனை உயிரோட்டமாக உள்ளத்தில் நுழைய முடியுமா என்று விழி விரிய வைத்தவள். இவளும் ஓவியத்தில்தான் ஆரம்பித்தாள். ஆனால் வரையக் காண்பித்தது கைக்கு பதில் வயிறு. மும்பைப் பெண்ணுக்குக் கூச்சமில்லாமல் இருக்கலாம். இந்த ஓவியனுக்கு அச்சமிருந்தது. மறுத்து விட்டேன். புறக்கணித்தேன். இரண்டு மணி நேரத்தில் மன்னிப் பேந்தி வந்து என்னை திக்குமுக்காடச் செய்தாள். தனது தவறை ஒப்புக்கொண்டு கையைக் காட்டினாள். அதில் பூமா தெரிந்தாள். என்னைச் சலனமின்றி வரைய வைத்தாள். ரூபாவுக்கு என் ஓவியத்தையும் என்னையும் மிகப் பிடித்துப்போனது. தமிழ்க் கலாசாரம் நெகிழ வைத்தது.

**"ஆயுசுக்கும் உன்னை பார்த்துட்டே இருக்கப் போறேன் பூமா..."**

"ஷ்யாம், நீ தமிழ்நாடு போறப்ப நானும் கூட வந்துர்றேன்."

"எதுக்கு?"

"எனக்கு ஓவியம் வரையக் கத்துக் கொடு."

"எதுக்கு?"

"நானும் உன்னை மாதிரி வரைஞ்சு பெரிய ஓவியராகணும்."

"ஆயி..."

"உன்னையே கட்டிக்கணும்."

"ப்ச்"

"என்ன ஷ்யாம், எதுனா தப்பா சொல்லிட்டேனா?"

"எல்லாமே தப்புதான்"

"ஏன் என்னைப் பிடிக்கலையா?"

"..........."

"உன்னை நேசிக்க எனக்குத் தகுதி யில்லையா?"

"எனக்குத்தான் இல்ல"

"ஏன், ஏன், ஷ்யாம்"

"அது அப்படித்தான், என்னை மற" ஆனால் அவள் மறக்கவில்லை. தினமும் எனக்குத் தொலைபேசி தன் காதலை வளர்த்தாள். மறக்க, மறக்க தொடர்ந்



தாள்... தட்டிக் கேட்டால்,

"நீ காதலிக்கலைன்னா போ, நான் காதலிக்கிறேன்" என்றாள்.

'எப்படியோ போ' என்று விட்டு விட்டேன்.

ஒருநாள் என் வீட்டுத் தொலைபேசி அழகாய் ஒலித்தது. ரசனையோடு எடுத்தேன்.

"ஹாய் ஷ்யாம், நான் ரூபா"

'ஓ! அதுதான் அழகோ!'

"என்ன, எதுவும் பேச மாட்றே? நான் இப்ப எங்கருக்கேன் சொல்லு பார்க்கலாம்"

"எங்க?"

"சென்னைல"

"எப்போ வந்த? எதுக்கு வந்த?"

"இப்போதான்... உன்னைப் பார்க்கத் தான், பேசத்தான்"

"அதான் நான் பூரா டெலிபோன்ல பேசறியே"

"இது ஸ்பெஷல் பேச்சு. அம்மாகிட்ட என் லவ்வ சொல்லிட்டேன். ஓகே சொல் லிட்டாங்க"

"நான் இன்னும் சொல்லலையே"

"சொல்ல வைக்கத்தானே வந்திருக் கேன்!"

"முடியாது"

"பார்க்கலாம்"

அவள் தொலைபேசியை வைத்த போது மணி மதியம் பன்னிரண்டு. அதற் குப் பிறகான நேரங்கள் என்னைத் தின்ன ஆரம்பித்தன. என் நினைவில் முன்னி, பூமா வலம் வரத் தொடங்கினர்... நெடு நேரத்துக்குப் பிறகு ரூபா. மெல்ல மெல்ல ஒரு பட்டாம்பூச்சி என் னுள் பறக்க ஆரம்பித் தது. ஒன்று இரண் டாகி, இரண்டு நான் காகி என்னை ரூபா விடம் நான் இழந்த போது, மணி மதியம் மூன்று.

என் நேசம் வேண்டி வருபவளை எதிர்நோக்கி நேச முடன் காத்திருக்கத் தொடங்கினேன்.

மணி 4... 4.30... 5.00

அவள் வரவே இல்லை. 5.30 இருக்கும் போது தொலைபேசி அழுதது.

"ரூபா" என்றுதான் எடுத்தேன்.

யாரோ ஒரு முரட்டுக் குரல் பேசியது...

"ரூபான்ற பொண்ணு ரோடு க்ராஸ் பண்ணும்போது லாரி மோதி இறந்துட் டாங்க... ஆஸ்பிட்டல்ல உங்க பேரத்தான் சொல்லியிருக்காங்க. கொஞ்சம் வர முடி யுமா?"

**நாளை...**

அவன் பெயர் ஷ்யாம். காதலை பாதுகாக்கத் தெரியாத துரதிருஷ்டசாலி. யாரும் அவன் போன்று இருந்து விடாதீர் கள். காதலை பூஜியுங்கள், வாசியுங்கள், அங்கீகரியுங்கள்... எல்லாவற்றுக்கும் மேலாய் காதலியுங்கள்!

சந்திப்பு: **மு. மாறன்**
படங்கள்: **ஸ்ரீஹரி**





# க்ளுக்! க்ளிக்!

**தி**ரைப்படத் துறையில் திரு விழா என்று வந்துவிட்டாலே கூடிக் குலாவி மகிழ்ந்திடுவார்கள். சமீபத்தில் நடந்த சுனா சுன் டேன், வேட்டையாடு விளையாடு,






**வா**ர்த்தைகளைச் சேர்த்து
காதலுடன் கோர்த்து
அனுப்பி வைத்தேன்
அவளுக்கு எஸ்.எம்.எஸ். ஆக!
பதில் வரவில்லை...
அட,
மௌனம் சம்மதம்!



**நீ** எனக்கு
எஸ்.எம்.எஸ். அனுப்ப
ஆரம்பித்த நாளிலிருந்து
மாறிவிட்டன

முகில்

## இனி 'செல்'லின்றி அமையாது காதல்!



# இளமை கல்கி







இதயத் திருடன் பட விழாக்களில் க்ளிக்கியவை இவை.

படங்கள் : பப்பி

செல்போன் கோபுரங்களெல்லாம் - என் குலதெய்வங்களாய்!

இதுவரை
நீ எனக்கு அனுப்பிய
இருவரி எஸ்.எம்.எஸ்.களை
தொகுத்தால்,
அட, இன்னொரு
திருக்குறள்
கிடைத்துவிடும்!

என் வீட்டிலும்
அவள் வீட்டிலும்
'தட்டை' மாற்றிக் கொள்வார்களோ,
இல்லையோ...
நாங்கள்
இதயம்போல்
செல்போன் 'Kit'-ஐ
மாற்றிக் கொண்டோம்

என் விரல்களுக்கு
பேசத் தெரிந்த பாஷை
உன்
செல்போன் எண் மட்டுமே!

பி.எஸ்.என்.எல்.,
ஏர்செல், ஏர்டெல்...
இனி
இப்படியும் அழைக்கலாம்
காதல் தூதுவர்களை!

# "என் ட்யூனுக்குத்தான் பாட்டெழுதணும்!"

ராம்கிரண் - இசையமைப்பாளர் தினாவுக்குப் போட்டியாக அவரது குடும்பத்திலிருந்தே உருவாகியிருக்கும் பதினோரு வயது இளம்புயல்... தந்தை எப்படிச் சின்னத் திரையிலும், வெள்ளித் திரையிலும் கலக்கிக் கொண்டிருக்கிறாரோ அதேபோல இவரும் கலக்கத் தொடங்கியிருக்கிறார்.

"இப்போ நான் சிக்ஸ்த் படிச்சிட்டு இருக்கேன். மூணு வயசு இருக்கும் போதே என்னை கர்நாடிக் மியூசிக் கத்துக்க அனுப்பிட்டாங்க. ஸ்கூல் முடிஞ்சவுடனே நேரா அப்பாவோட ஸ்டூடியோவுக்குப் போயிடுவேன். அங்கே அப்பா மியூஸிக் கம்போசிங் சம்பந்தமா என்னென்ன செய்றாங்களோ எல்லாத்தையும் வாட்ச் பண்ணிட்டு இருப்பேன். திடீர்னு ஒரு ட்யூன் போடுப்பான்னு சொல்வாங்க. போட்டுக் காட்டுவேன். இதை ஸ்டூடியோவுக்கு வர்ற தயாரிப்பாளர் எல்லாரும் கவனிச்சிருப்பாங்க போல. ஒரு தடவை சுஜாதா விஜயகுமார் ஆன்ட்டி, அப்பாகிட்ட வந்து 'மனைவி' சீரியலுக்கு மியூஸிக் பண்ணக் கேட்டாங்க. அப்பா ரொம்ப பிஸியா இருந்ததால என்னை மியூஸிக் போட்டுத் தரச் சொன்னாங்க. ஏற்கெனவே அப்பாகூட நல்லா மியூசிக்ல பழகிட்டதால உடனே ஒத்துக்கிட்டு அஞ்சு டியூன் போட்டுத் தந்தேன். அதுல பெஸ்ட் டியூனை அப்பா செலக்ட் பண்ணினாங்க. அந்த டியூன்லதான் இப்போது 'மனைவி' டைட்டில் சாங் போயிட்டிருக்கு.

என்னோட மியூசிக் அழகன் தமிழ் மணி சாருக்கும் பிடிச்சிருக்கும்போல. தன்னோட 'முந்தானை முடிச்சு' சீரியலுக்கு என்னை மியூஸிக் பண்ணச் சொன்னாங்க. பண்ணிக் கொடுத்திருக்கேன். அந்த டைட்டில் சாங்கைப் பாடினது 'மன்மதராசா' மாலதி... இந்த சாங் மூலமாத்தான் அவங்க டி.வி.க்கு அறிமுகமாகியிருக்காங்க. இப்போதைக்கு நான் டியூன் போட்ட பிறகுதான் லிரிக்ஸ் எழுதணும். ப்யூச்சர்ல அப்பா மாதிரியே லிரிக்ஸ்க்கு டியூன், டியூனுக்கு லிரிக்ஸ்னு ரெண்டுக்கும் தயாராயிடுவேன். சீக்கிரத்துல படத்துக்கும் மியூஸிக் பண்ண ஆரம்பிச்சுடுவேன்.

அதுக்காகத்தான் கர்நாடிக் மியூஸிக், பியானோ, வீணைன்னு அம்மா என்னை செம டிரில் வாங்கறாங்க. அப்புறம் எங்க அப்பாகிட்ட இருக்கற சவுண்ட் இன்ஜினியர் மூலமா சில டெக்னிக்கல் விஷயங்களையும் கத்துக்கிட்டு இருக்கேன்.." என்று சொல்லும் ராம்கிரண், படிப்பிலும் படுசுட்டி!

- கலை

படம் : ராஜன்

## சிப்ஸ்

● அரசியலை பார்ட் டைம் பிசினஸாக வைத்திருக்கும் வாழப்பாடி இராம சுகந்தனுக்கு முழு நேரத் தொழில் சாஃப்ட்வேர் பிசினஸாம்.

● மு.க. ஸ்டாலினின் புகழ்பாடும் விதமாக மாத இதழ் ஒன்று வெளிவருகிறது. அவர்களது சமூகத்தினரால் வெளியிடப்படும் அந்த இதழின் பெயர் 'தமிழினத் தளபதி'.

- ஸ்வரா

# கவ்பாய்ஸ், கவ்கேர்ள்ஸ்!

முதலில் 'ச்சோ ஹாட்டாக' அறிமுகமான ஜீன் பேண்ட், பின்னர் 'ச்சோ சாஃப்ட்டாக' வளர்ந்து, இப்பொழுது 'ச்சோ ச்வீட்டாக' மாறியிருக்கிறது. இந்த மாபெரும் வளர்ச்சி எப்படி சாத்தியமானது? இதோ உங்களுக்காக ஜீன் பேண்ட்டின் மினி ப்ளாஷ்பேக்!

**1886**ல் லெவி நிறுவனம் ஒரு விளம்பரத்தை வெளியிட்டது. அந்த விளம்பரத்தில், இரண்டு குதிரைகள் ஒரு பேண்ட்டின் இரண்டு கால்களையும் பிடித்து இழுத்துக் கொண்டிருக்கும். "பார்த்தீர்களா, எங்களுடைய ஜீன் அவ்ளோ ஸ்ட்ராங்காக்கும்!" என்று பீற்றிக் கொண்டது லெவி. இந்த முரட்டு விளம்பரத்தைப் பார்த்த பலர், அழுக்கில் கன்னாபின்னா வேலைகள் செய்வதற்காக ஜீன் பேண்ட்டை உபயோகிக்கத் தொடங்கினார்கள்.

1930ல், கவ்பாய் பட ஹீரோக்கள் குதிரையில் சுற்றிக்கொண்டே ஜீன் பேண்டிலிருந்து துப்பாக்கியை எடுத்து டமால் டுமீல் என்று சுடும் ஸ்டைலால் கவரப்பட்ட பல இளைஞர்கள் அதிரடியாக ஜீனுக்குத் தாவினார்கள். 1960களில் மாணவர்களோடு சேர்ந்து ஜீனும் "மே ஐ கமின் சார்" என்று சொல்லி காலேஜுக்குள் நுழைந்தது.

அதுவரை முரட்டுத்தனமாக இருந்த ஜீன் காலேஜிற்குள் நுழைந்த கையோடு 'ச்சோ ச்ச்சாப்ட்டாக' மாறிப்போனது. அமெரிக்கப் பெண்களைப் பார்த்து கண் சிமிட்டியது. பிறகு ஹாலிவுட் படங்களில் மர்லின் மன்ரோ ஜீன் போட்டு வந்ததும் ஜீன் ஜுரம் அங்கே எகிறியது.

தமிழ்நாட்டில் மட்டும் என்னவாம்? "என்னதான் இருந்தாலும் புடைவை மாதிரி வரவே வராது" என்று மல்லிகைப் பூவை நாரில் வைத்துத் தொடுத்துக்கொண்டே சத்தியம் செய்த பெண்கள், "எங்க க்ளாஸ்ல வினிதா, கனிதா எல்லாரும் ஜீன் போட்டுக்கறாங்க மம்மி. நானும் ஒரே ஒரு வாட்டி போட்டுக்கறேனே, ப்ப்ப்ளீஸ்" என்று அம்மாவிடம் கொஞ்சி, கெஞ்சி, ஜீனுக்குத் தாவி... இப்பொழுது சாரி, ஹாஃப் சாரி எல்லாவற்றிற்கும் ஒரு பெரிய 'ஸாரி' சொல்லி விட்டு "ஜீன் ஈஸ் ஸ்டைல்யா" என்று டெடி பேரை கட்டிபிடித்துக் கொண்டு சிரிக்கிறார்கள்.

லேட்டஸ்ட் ஃபேஷன் என்ன தெரியுமா? புது ஜீன் பேண்ட்டை கசங்காமல் வாங்கி வந்து ரம்பத்தால் கிறி அல்லது பல் சக்கரத்தில் மாட்டி ஒட்டையாக்கி அல்லது தண்டவாளத்திற்கு அடியில் சுருட்டி வைத்து, அதில் பட்டை பட்டையாகக் கோடு போட்டு, டார் டாராகக் கிழித்து 'டெகரேட்' செய்து, பிறகு அதை எடுத்து அயர்ன் செய்து திருப்தியுடன் அணிந்து கொள்வதுதான்.

இன்னும் பலர், சுரண்டி எடுக்கின்ற அளவிற்கு ஜீனில் அழுக்கு சேர்ந்தால் கூட அதைத் துவைப்பதில்லை. ஏதோ கேர்ள் ஃப்ரெண்டை ஆட்டோ ஏற்றி வீட்டுக்கு அனுப்புவது போல பேண்ட்டுக்கு பிரியாவிடை கொடுத்து அரை மனதுடன்தான் அதை வாஷிங் மெஷினுக்கு அனுப்பி வைக்கிறார்கள்.

சில ஜீன்ஸ்களுக்கு மொத்தம் எத்தனை பாக்கெட்ஸ் என்று லாப்டாப் வைத்துக்கூட எண்ண முடிவதில்லை. மாரல் ஆஃப் த ஸ்டோரி என்னவென்றால், ஜீனின் இந்த மெகா வளர்ச்சிக்குக் காரணம் அது காலேஜுக்குள் நுழைந்தது தான். அதுவும் கோ-எட் காலேஜிற்குள்.

- இன்பா

# கட்டழகு மலர்!

எங்கள் அரசக் குடும்பத்தோடு கல்கி குடும்பத்துக்கு நல்ல நட்பு உள்ளது. அமரர் 'கல்கி'யின் பாடல்களுக்கு நான் நடனம் ஆடியுள்ளேன். எம்.எஸ் அவர்களும் எங்கள் திருவாங்கூர் அரண்மனையில் பாடியுள்ளார்.

'கல்கி'யில் இசைக்கு நல்ல முக்கியத்துவம் தருகிறார்கள். நானும் எனது மாணவிகளும் அடிக்கடி 'கல்கி'யில் வெளிவரும் பல இசை, நடனம் பற்றிய கட்டுரைகளை ஆழமாக விவாதிப்பது உண்டு. கலாசார வேர்களில் பூக்கும் கட்டழகு மலர் 'கல்கி'!

- நடனக் கலைஞர் கோபிகா வர்மா

படம்: மீடியா ராமு

